# செந்திலாண்டவனும், கட்டபொம்முவும்,

## எனும் நூலுக்கு, சிறப்பு உரை.[1]

வீரபாண்டிய கட்டபொம்மு துரை அவர்களின் பேரனும், அரசாங்கதபால் அலுவலகத்தில் இருந்து ஓய்வு பெற்று வருபவரும், உயர்திரு: S. ஜெகவீரபாண்டியதுரை யவர்கள் பாடிய பாடல்கள்.

மகத்தான பன்னிரு சூரியரால் மலராய் என்று
அகத்தா மரையை அலர்வித்ததால் அன்று ராவணனை
உகத்தான பொருது சங்கரநாராயணு உனதுள்ள நட்பு
மிகத்தான் பெரிது பெரிது காண் மேதினிக்கே.

மாலோன் சகோதரி ஆவுடைத்தாய் பெற்றமைந்தெனும்
வேலா உனக்கு ஒருவிண்ணப்பம் கேள் இந்த மேதினியில்
கோலா கலன் சங்கரநாராயணனின் குடும்பஸ்தர்கள்
ஆலா விருட்சங்கள் போலே தழைக்க அருள் செய்வையே

சங்கர நாராயணுய் தான்வந்தசாமி நீ
பங்கமிலாச் செல்வம் படைத்திட்டாய்
இங் கெமது கஷ்டத்தை நீக்கும் கடமை உனக்குளதால்
நஷ்டமில்லை செம் பொன்னை நல்கு.

எங்கள் வம்ச வரலாற்றை நல்ல முறையில் புனித நூலாக வெளியிட்ட அன்பர்கள் வித்துவான் வீரமல்லுச் சாமிக்கும், சங்கரநாராயணனுக்கும், எங்கள் நன்றி அன்பை தெரிவித்துக்கொள்கிறோம். இங்ஙனம்,

பாஞ்சாலம்குறிச்சி ஜமீன்தார்கள்,

**D. சுப்பிரமணியதுரை, S. ஜெகவீரபாண்டியதுரை,**
**J. சோமசுந்தர கட்டபொம்முதுரை, J. சுப்பிரமணியதுரை,**
**J. கம்பெனிசெல்வத்துரை.**

# பாராட்டு உரை.

வித்துவான் வீரமல்லுச்சாமி அவர்களும், சங்கரநயினர் கோவில் ஸ்ரீ ச. சங்கரநாராயணன் அவர்களும், சேர்ந்து எழுதியுள்ள 'சேந்திலாண்டவனும், **கட்டபொம்முவும்**' என்ற புத்தகத்தை நான் படித்தேன். அதைப் படிக்கும்போது என்னை அறியாமலேயே ஒரு உணர்ச்சி ஏற்பட்டு மெய் சிலிர்த்தது. வீரரஸத்தையும், பக்திரஸத்தையும், ஒன்று படுத்தி எழுதப்பட்டிருக்கும் இது ஒரு சிறப்பான நூல். இது பள்ளியில் படிக்கும் சிறுவர்களுக்கும், வயது முதிர்ந்தவர்களுக்கும் கூட வாழ்க்கையில் உபயோகப்படும் புத்தகம். தேச சேவைக்கு தெய்வபக்தி எவ்வளவு முக்கிய மென்று நன்றாக எடுத்துக்காண்பித்து இந்தப் புத்தகத்தை வெளியிட்டதின் மூலமாக நம் தாய்நாட்டுக்குத் தொண்டாற்றியுள்ள ஆசிரியர்களுக்கு இந்த பாராட்டு உரையின் மூலம் என் வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

(ஜெமினி அபூர்வ சகோதரர்கள், ஔவையார்) போன்ற படங்களில் நடித்தவரும், திரைப்பட டைரக்டருமான

**G. பட்டு அய்யர்.**

அபிராமபுரம், சென்னை.

# காணிக்கை.

## செந்தில் - வேலவனுக்கு.

இந்த புனித வரலாற்றை நாங்கள் மனமுவந்து செந்திலாண்டவனுக்கு காணிக்கையாக சமர்பிக்கிறோம். இறைவன் அன்பும், இறைபணியாளார், ஆலய நிர்வாக சிப்பந்திகள் செய்த உதவிக்கும் எங்கள் அன்பு உரியதாகும்.

தங்கள் அன்பர்கள்,

வித்துவான் :-

**வீரமல்லுச்சாமி & சங்கரநாராயணன்.**

**இதன் விலை அணு 0--8--0.**

# செந்திலாண்டவனும் கட்டபொம்முவும்

## நூல்

### காப்பு

**திருச் செந்தில் முருகன்**

*தந்திமுகனுக் கிளையோன் தாரகனைமாய்த் தலைவாய்ச்*
*செந்திற் பதியமரும் செவ்வேலோன் — வந்தெனது*
*சிந்தை திருத்தித் தெளிந்த அறிவளித்து*
*முந்துறவே நிற்கும் முனைந்து.*

நீர்வளம் மிக்கஏரிகள், வளமார்ந்த நெல் வயல்கள், எங்கு நோக்கினும் பச்சைப் பசேலென்ற கண்ணுக்கினிய காட்சிகள் நாலாபக்கமும் நறுமண மலர்களைப் பூத்து நிற்கும் பூம் பொழில்கள், அவற்றிடையே மயிலும் குயிலும் மகிழ்ந் துலாவின. சாலிகுளம் என்னும் மலைச்சாரலிலே மான்கள் தம் இளம் பிணைகளோடு துள்ளித்திரிந்து விளையாடுகின்றன. இத்தகைய எழிற் காட்சிகளின் நடுவே வானளாவிய கோட் டை மணிக்கலசங்கள் ஒளிவிடத் தன்னிகரில்லாத் தனிப் பெருமையோடு தலைநிமிர்ந்து நிற்கிறது. காலையும் மாலையும் கோட்டை வாயலில் மங்கல முரசுமுழக்கம் இடையிடையே வீர முரசின் வீரொலி கேட்கிறது வில்லும் வாளும், வேலும் ஏந்தி முறுக்கிய மீசையோடு வீரர்கள் பலர் காவல் காத்து நிற்கின்றனர் படை ஏந்திய வீரர் பலர் உள்ளே செல்வதும் வருவதுமாய் இருக்கிறார்கள். பரிசில் பெற்றுச் செல்லும் புலவர் செல்கிறார்கள். தெய்வத்தின் ஆலயத்துள் நுழையும் பக்தர்களைப்போல அன்பும் மரியாதையும் தழைக்க பெரு

மக்கள் பலர் மன்னரிடம் சென்று அளவளாவி மகிழ்ந்து செல்கின்றனர். போர் நோக்கிப் பொங்கியெழுகின்றபட்டத்து யானையின் முழக்கொலி யாவர் காதிலும் ஒலிக்கின்றது. இத்தகைய சிறப்புக்களோடு கல்யாண மகால் என்னும் அரச மாளிகையிலே வீரத்தெய்வமே ஓர் உருவெடுத்து வந்தாற் போல மந்திரி பிரதானிகள் புடைசூழ, தம்பிமார்கள் தனி இருக்கசிங்க ஏறுணைச் சிம்மாசனத்தில் அமர்ந்து தென் தமிழ் நாட்டில் செங்கோல் நடாத்தினார் வீரபாண்டியக் கட்ட பொம்மு.

## 1. தென்னாட்டு வருகை.

வீரபாண்டிய கட்டபொம்முவின் முன்னோர்கள் ஆந்திர நாட்டிலே பல்லாரி மாவட்டத்தில் குறுநில மன்னர்களாய் வாழ்ந்தார்கள். நேர்மையற்ற முகமதிய மன்னர்களின் தீக் குணங்களைச் சகியாது தென்னாடு போந்தார்கள். நாடாண்ட மன்னரும் காடாளுதல் காலத்தின் விசித்திரமாதலின் பசுக் களையே தமது உடைமையாகக்கொண்டு நெல்லை வட்டத்துள் சாலிகுளம் என்னும் மலைச்சாரலில் குடியேறினார்கள்.

## 2. ஆட்சிப்பேறு.

தற்போது நெல்லை மாவட்டத்துக்குக் கீழ்திசையில் விளங்கும் ஓட்டப்பிடாரம் என்னும் சிற்றூர் அக்காலத்து, மன்னர் இருந்து ஆட்சிசெய்யும் மாநகராய் விளங்கியது. ஜெக வீரபாண்டியனென்ற அரசன் அந்நகரிலிருந்து ஆட்சிசெய்து வந்தான். பகைவர்களின் தாக்குதலைத் தாங்காத அம் மன்னன் சாலிகுளத்தில் குடியேறிய ஆதி கட்டபொம்முவை தனக்குப் படைத்துணையாகப் பெற்று அன்னாரின் வலிமை யால் பகைவர்களைப் புறங்கண்டு பாராண்டுவந்தான். நாளடை

வில் அவனுக்கு மகப்பேறு இல்லாது போகவே ஆட்சிப் பொறுப்பை ஆதிக் கட்டபொம்முவிடம் கொடுத்துவிட்டு விண்ணுலகு அடைந்தான்.

## 3. கோட்டை அமைப்பு.

"இமைப்பினும் பிறப்பயக்கும் நற்பாலவை" என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாய்மைக்கிணங்க ஆந்திர நாட்டில் இருந்துவந்த அரசுரிமையைத் தமிழ் நாட்டில் ஜெகவீரபாண்டியன் என்னும் அரசனால் பெற்று பணிமுடி சூடி மாணிலம் ஆண்டார் கட்டபொம்மு. தெலுங்கராயினும் தமிழகத்தையே தாயகமாகக்கருதித்தமிழ்க்குடியோம்பித் தன்னிகரில்லாத தமிழ்ப் பெருமன்னராக விளங்கினர். ஓர்நாள் வேட்டையாடுங்கால் வியத்தகு நிகழ்ச்சியொன்றைக் கண்டார். வேட்டை நாய்களால் துரத்திச் செல்லப்பட்ட முயலொன்று ஓரிடத்தை அடைந்தது. திரும்பி வேட்டைநாய்களைத் துரத்தியடித்தது. இந்நிகழ்ச்சியைக் கண்ட மன்னர் வீரமே தன் உயிர் இலட்சியமாகக் கருதி அவ்விடத்திலேயே தன் தலைநகரை அமைக்க எண்ணி ஆவன செய்தார்.

### மன்னரின் கருத்துப்படி.

யாவரும் வியக்கும் நிலையில் ஓர் நகரமே உருவாயிற்று நீரரண், நிலஅரண், மதிலரண் முதலிய அமைதிகள் செம்மையுற ஆக்கப்பட்டுப் பகைவர் அஞ்சும் நிலையில் விளங்கியது. தக்க நல்லோரையில் அந்நகரில் குடிபுகுந்து சீரும், சிறப்பும் பெற்றுக் கட்டபொம்மு அரசாண்டு வரலானர். 1792 to 1799 வரை 47 தலைமுறைகளாக எல்லாவிதமான நல்ன்

மாகவும் வெற்றியைத்தரும் தெய்வமாகவும் முருகனைக்கருதி னார்கள். வீரத்தெய்வம் என்பதற்கு அறிகுறியாக கூர்மை பொருந்திய வேலாயுதத்தை நட்டு மறியறுத்து வெறியாடி விழாவைச் செய்வார்கள்.

முல்லை நிலத்தில் மக்கள் வாழத்தொடங்கிய பொழுது தம் உயிர் வாழ்க்கைக்குப் பசுக்களை வளர்க்கத்தொடங்கினார் கள். பசுக்களையும் தம்மையும் காக்கின்ற முருகப் பெருமா னுடைய சக்திக்குத் திருமால் என்று பெயரிட்டார்கள்.

இவ்வாறு மருதம் நெய்தல் முதலிய நிலங்களில் குடி யேறியபொழுது வேறு வேறு பெயரிட்டு வழிபாடு செய்தார் கள். நானிலத்து மக்களும் முருகப் பெருமானையே முதற் பெரும் கடவுளாகவும் வீரமூர்த்தியாகவும் கருதி வணங்கி னார்கள் என்பதைப் பழம்பெரும் நூல்களிலிருந்துஉணர்ந்து கொள்ளலாம.

வீரா! முதுசூர்பட வேலெறியும் சூரா!
மெய்விடா வீரன் நக்கீரா.
வானோர் வணங்குவில் தானைத்தலைவ
செருவில் ஒருவபொரு விறல்மள்ள
சூர்மருங்கு அறுத்த சுடர்ப் படையோய்.

எனப் பலபடப் பாராட்டிப் பழங்கால இலக்கியங்கள் முருகன் வீரத்தைப் புகழ்கின்றன செருநர்த் தேய்த்துச்செல் சமம் முருக்கிக் கறுவுகொள் நெஞ்சமோடு களம் வேட்கின்ற பெருமானைக் காண்கின்றார் நக்கீரர் பெருமான்.

மக்களுக்கு ஏனைய பண்புகளுக்கெல்லாம் அடிப்படையாக நிற்பது வீரம். வீரம் இன்றேல் ஏனைய பண்புகளெல்லாம் நிலைபெற்றிரா. "வீரம் என்பது வெற்றிவேல் எம்பிரான் தனது சீர்மை" என்றார் ஜெகவீர பாண்டியனார். சிவபெருமான் அருட்செல்வம் பெற்ற அடியவர்களெல்லாம்வீரர்களாய்த் திகழ்ந்தனர் என்பதைச் சமய இலக்கியங்களில் காணலாம். ஏனைய பண்புகளை உள்ளடங்கி வீரம் மேலோங்கி நின்ற ஒருவனை முருகப்பெருமானுடைய அருளை மிகுதியும் பெற்றவன் என்று கொள்ளலாம். அத்தகைய அருள் வீரனாகிய கட்டபொம்மு செந்திலாண்டவனிடத்துக் கொண்ட அன்பின் ( பக்தியின் ) பெருக்கை பின்வரும் பகுதிகளால் நன்கு அறிந்து கொள்ளலாம்.

## 7. திக்கு விசயத் துரை.

கட்டபொம்முவின் பரம்பரையினர் பாஞ்சாலங்குறிச்சியைத் தலைநகராகக்கொண்டு நாற்பத்திஎட்டுத் தலைமுறையாக சுமார் எழுநூறு ஆண்டுகள் தமிழ் நாட்டின் தென்பகுதியை ஆண்டார்கள். அவர்களுள் நாற்பத்தி ஆறும் தலைமுறையில் வந்தவர் ஜெகவீரக் கட்டபொம்மு. தமிழ் நாட்டில் பல குறுநில மன்னர்கள் அவர்காலத்து இருந்தார்கள். பெயரளவிற்கு ஆற்காட்டுநவாபு பேரரசராக விளங்கினார். குறும்பு செய்த குறுநில மன்னர் பலரைப் படையெடுத்துச் சென்று அடக்கியமையால் ஜெகவீரக் கட்டபொம்மு, திக்குவிசையர் என்ற பெயரால் அழைக்கப்பட்டார். பிற்காலத்து அவர் இயற்பெயர்மறைந்து திக்குவிசையப் பாண்டியர் என்றே வழங்கிவந்தது. எல்லை அற்ற ஆற்றல், பேரழகு, பெருங்குணம் முதலிய பண்புகளெல்லாம் இவரிடம் சிறப்பாக அமைந்திருந்தன. முருகப்பெருமானிடம் தனக்கு முன்

படும். அவ்வோசையைக் கேட்டு அடுத்தமண்டபத்திலுள்ள
முரசைப் பணியாளர்கள் முழக்குவார்கள் அதைத்தொடர்
ந்து ஏனைய முரசுகளெல்லாம் முறையே ஒன்றன்பின் ஒன்
றாக முழக்கப்படும். இறுதியில் பாஞ்சைக் கோட்டையில்
முரசு ஒலி முழங்கும். அரைமணி நேரத்திற்குள் செந்தில்
செய்தி பாஞ்சைக்கு வந்துவிடும். இவ்வொலி கேட்டு திக்கு
விசயர் மனமகிழ்ச்சி பொங்க முருகன் வழிபாட்டை முடித்
துக்கொண்டு உணவுக்குச் செல்வார். இதுவே அவருடைய
தின வழக்கமாக இருந்துவந்தது.

இவ்வாறு அமைந்த மண்டபங்கள் வழிநெடுகிலும் இன்
றும் பாழடைந்த நிலையிற் காணப்படுகின்றன. இவை
களை நகராமண்டபங்கள் என்று மக்கள் வழங்குகிறார்கள்.
ஆத்தூர், ஆறுமுகநேரி, வாகைக்குளம், பேரூரணி, கள்ளன்
பறம்பு முதலிய இடங்களில் இவற்றைக்காணலாம்.

## 9. திருநீற்றுக் குதிரை

இதுவல்லாமல் வாரம் தோறும் ஒருமுறை திருச்செந்
தூரிலிருந்து முருகப் பெருமானின் திருவருள் குறிப்பாகிய
திருநீறு பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்து சேரும், இதற்காக
இரண்டு உயர்ந்த குதிரைகள் அங்கு நிறுத்தப்பட்டிருந்தன.
குதிரை ஊர்ந்துசெல்லும் வீரர்களும் நியமிக்கப்பட்டிருந்தார்
கள். வெள்ளிக்கிழமை தோறும் ஆண்டவன் பிரசாதம் ஓர்
அழகிய பேழையுள் வைக்கப்பட்டுக் குதிரை வீரரிடம்
தரப்படும். பட்டால் சூழப்பட்ட அப்பேழையை வீரர்கள்
பணிவுடன் வாங்கி சிலமணி நேரங்களுக்குள் பாஞ்சைக்குக்
கொண்டு சேர்த்து விடுவார்கள். அந்நாள் மட்டும் அரசர்
திருநீறு பெற்ற பின்பே உணவு கொள்வார்.

ளுண்ட அரசர்களைவிட உருகிய அன்புடையவராய் விளங்கி ஞர்.

இவருடைய மனைவியார் பெயர் ஆறுமுகத்தம்மாள். கணவருக்கேற்ற காரிகையராய் இவர் அமைந்தொழுகினர். அரும் பெரும் அரசச் செல்வம் பெற்றிருந்தும் திக்குவிசயர் ஒருபொழுதே உணவுண்டு அல்லும் பகலும் அறுமுகப்பரமனை ஆராதித்து வந்தார். திருச்செந்தில் திருக்கோயிலில் முருகப்பெருமானுக்கு உச்சிக்காலம் பூசை முடிந்ததைத அறிந்த பின்பே தாம் நண்பகல் உணவு உண்பது இவர் வழக்கம்.

## 8. நகரா மண்டபங்கள்.

திருச்செந்தூருக்கும் பாஞ்சாலங்குறிச்சிக்கும் ஏறத்தாழ நாற்பது கல் தொலைவிருக்கலாம். திருச்செந்தில் திருக்கோயில் அக்காலம் பாஞ்சாலங்குறிச்சியார்களின் மேற்பார்வையிலேயே இருந்தது. தலத்தார் தானத்தாரோடு உசாவி கோயில் நடைமுறைக்காரியங்களும் பெருவிழாக்களும்திருப்பணிகளும் அவர்களால் செய்யப்பட்டுவந்தன. திக்கு விசயத்துரை உச்சிக்காலம் முடிந்தே உணவு கொள்வர் ஆதலால் அப்பூசை முடிந்ததை அறிந்துகொள்ள (நாற்பது மைல் தொலைவிற்கும்,) இரண்டு மைல் சில இடங்களில் நான்கு மைல்களுக்கொன்ருகப் பல மண்டபங்களைத் திருச்செந்திலிலிருந்து பாஞ்சைக்குச் செல்லும் வழிநெடுகிலும் அமைத்திருந்தார். ஒவ்வொரு மண்டபத்திலும் ஒரு பெருமுரசும் இரண்டு மூன்று பணியாளர்களும் இருப்பார்கள். கோயிலில் உச்சிக்காலப் பூசை நடைபெறும்பொழுது சண்முகவிலாசத்தில் அமைத்து வைக்கப்பட்டிருந்த பெருமுரசம் முழக்கப்

படும். அவ்வோசையைக் கேட்டு அடுத்தமண்டபத்திலுள்ள முரசைப் பணியாளர்கள் முழக்குவார்கள் அதைத்தொடர்ந்து ஏனைய முரசுகளெல்லாம் முறையே ஒன்றன்பின் ஒன்றாக முழக்கப்படும். இறுதியில் பாஞ்சைக் கோட்டையில் முரசு ஒலி முழங்கும். அரைமணி நேரத்திற்குள் செந்தில் செய்தி பாஞ்சைக்கு வந்துவிடும். இவ்வொலி கேட்டு திக்குவிசயர் மனமகிழ்ச்சி பொங்க முருகன் வழிபாட்டை முடித்துக்கொண்டு உணவுக்குச் செல்வார். இதுவே அவருடைய தினவழக்கமாக இருந்துவந்தது.

இவ்வாறு அமைந்த மண்டபங்கள் வழிநெடுகிலும் இன்னும் பாழடைந்த நிலையிற் காணப்படுகின்றன. இவைகளை நகரா மண்டபங்கள் என்று மக்கள் வழங்குகிறார்கள். ஆத்தூர், ஆறுமுகநேரி, வாகைக்குளம், பேரூரணி, கள்ளன்பறம்பு முதலிய இடங்களில் இவற்றைக்காணலாம்.

## 9. திருநீற்றுக் குதிரை

இதுவல்லாமல் வாரம் தோறும் ஒருமுறை திருச்செந்தூரிலிருந்து முருகப் பெருமானின் திருவருள் குறிப்பாகிய திருநீறு பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்து சேரும், இதற்காக இரண்டு உயர்ந்த குதிரைகள் அங்கு நிறுத்தப்பட்டிருந்தன. குதிரை ஊர்ந்துசெல்லும் வீரர்களும் நியமிக்கப்பட்டிருந்தார்கள். வெள்ளிக்கிழமை தோறும் ஆண்டவன் பிரசாதம் ஓர் அழகிய பேழையுள் வைக்கப்பட்டுக் குதிரை வீரரிடம் தரப்படும். பட்டால் சூழப்பட்ட அப்பேழையை வீரர்கள் பணிவுடன் வாங்கி சிலமணி நேரங்களுக்குள் பாஞ்சைக்குக் கொண்டு சேர்த்து விடுவார்கள். அந்நாள் மட்டும் அரசர் திருநீறு பெற்ற பின்பே உணவு கொள்வார்.

## 10. " கட்டபொம்மு கண் கொடுப்பான் "

உண்மை அடியார்களின் அன்பையும் பெருமையையும் உலகமக்களுக்கு வெளிப்படையாகக் காட்டுவதற்காக ஆண்டவன் அவர்களிடம் அருளாடல்புரிவது தொன்று தொட்டுச் சமய நூல்களால் நாம் அறிந்த உண்மை. பெரிய புராணத்துட் பேசப்படுகின்ற அடியார்களெல்லாம் அருளாடல்களால் ஆட்கொள்ளப் பெற்றவர்களே.

முருகப்பெருமான் அடியார் பக்கல் ஆடிய அருளாடல்கள் பல. நெடுநாட்களுக்கு முன் திருச்செந்தூர் திருக்கோயிலில் நைவேத்தியம் ஆக்கும் மடைப்பள்ளித் தொழிலிலே ஈடுபட்டு, அதைச் சரிவரச் செய்யாமையால் கோயிலாரால் தள்ளப்பட்டு, எழுத்தறிவின்மையால் வேறு தொழில் செய்ய இயலாமல் உயிர்நீக்கத் துணிந்த வென்றி மாலை என்னும் மறையவருக்குக் கடல் மடை திறந்தாற்போன்று கவி மழை பொழியும்படி ஆற்றலை அளித்தார். பிறவியிலேயே ஊமையாக இருந்த குமரகுருபரரை ஊமை நீக்கிப்பிரபந்தங்கள் பாடும்படி செய்தார். பரத்தையர் மனையே பரகதியெனக் கிடந்து தொழுநோய் பெற்ற அருணகிரிநாதருக்குத் திருப்புகழ் பாடும் வன்மையைத் தந்து ஆட்கொண்டார். இத்தகைய அருளாடல் ஒன்றை முருகப்பெருமான் தம் அடியவராகிய கட்டபொம்முவிடத்தும் செய்தருளினார்.

வடநாட்டிலிருந்து வந்த அந்தணப் பெரியோர் ஒருவர், இரண்டுகண்களும் ஒளியிழந்த அந்தகர். கலியுக வரதன் கந்தக்கடவுள் என்பதை உணர்ந்த அவர் தம் கண்கள் ஒளி பெற வேண்டித் திருச்செந்தூர் திருக்கோயிலில் தவம் கிடந்தார். நாற்பது நாட்கள் உணவுகொள்ளாது அரும்பெரும் நோன்பை மேற்கொண்டார்.

நாற்பது நாட்கள் நன் நோம்பியற்றித் தவம் செய்தும் கண் தெரியாமை கண்ட அந்தணர் மிகவும் வருந்தியவராய்த் தாம் இன்னும் உலகில் வாழ்வது பயனற்றதென்பதைக்கருதி உயிர் போக்கும் எண்ணம் உடையவராய் நடுநிசியில் எழுந்து திருக்கோயில் மண்டபத்துள் கல்தூண் ஒன்றில் தலையை மோதிக் கொள்ளச் சென்றார். அதையறிந்த முருகப்பெருமான், அவர் கண்களில் ஒன்றை ஒளிவரச் செய்தார். ஒரு கண் தெரியப்பெற்ற வேதியர் மகிழ்ச்சி மிகுதியால் ஆடிப் பாடி ஆண்டவனைத் துதித்து இறைவனே! என்னையாட் கொண்ட எம்மானே! மற்றொரு கண்ணையும் கொடுத்தருளல் வேண்டும் என்று துதித்து நின்றார். இறைவன் அசரீரியாக அன்ப! நாம் ஒரு கண்ணை உனக்குத் தந்தோம். மற்றொரு கண்ணை நம் பக்தன் கட்டபொம்மு கொடுப்பான். பாஞ்சாலங்குறிச்சிக்குச் சென்று அதனைப் பெறுவாயாக என்று அருளினார். இதைக்கேட்ட அம்மறையவர் மிகுதியும் மகிழ்ச்சியுடையவராய் மறுநாட்காலை எழுந்து நீராடிக் குமரப்பெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, பாஞ்சைக்குப் புறப்பட்டார். அன்று மாலையே பாஞ்சாலங்குறிச்சியை அடைந்து அரண்மனையில் அரசரைக்கண்டு வணங்கித் திருச்செந்தில் ஆண்டவன் திருவாணையைத் தெரிவித்து நின்றார். அதுகேட்ட திக்குவிசயத்துரை வியப்பு மிகுதியால் ஆண்டவன் அருளை நினைந்து நினைந்து மனமுருகினார். உடம்பெல்லாம் மயிர்க் கூச்செறிய இரு கண்களிலும் தாரை தாரையாகக் கண்ணீர் பெருக யாதும் கூறாது சிறிது பொழுது வாளா இருந்தார். சிறிதுநேரம் சென்று நாக்குளற அன்பரே! என்னை ஆளுடைய செந்தில் பெருமான் சிறியேன் மாட்டுச் செய்த திருவருள் இதுவாயின் நாளைக்காலை நமக்கு அதுதரு

வல் என்று கூறி, அவருக்கு ஆவனசெய்யுமாறு பணியாளர்களிடம் கூறிக்கொலுவிருந்து, இரவு உணவு கொள்ளாது படுக்கை இன்றித் தரையில்கிடந்து இறைவன் இணையடிகளை மனத்துள் தியானித்துக் கொண்டே துயில்கொண்டார்.

அதிகாலையில் மன்னர் துயில்நீங்கி எழுந்து மணநீராடி, பூசையுடைதரித்து, பூசையறையுட் சென்று நீண்ட நேரம் வழிபாடு செய்துவிட்டு இடதுகையில் திருநீற்றுக் கப்பரையும் வலது கையில் வாளும் ஏந்தி பூசையுடையைக் களையாமலும் அரச ஆடைகளை உடுத்துக்கொள்ளாமலும் பத்து மணிக்குக் கொலு மண்டபத்துள் புகுந்தார். பார்த்தவர் யாவரும் அரசருடைய கோலத்தைக்கண்டு அச்சம் அடைந்தவராய் யாதுநேருமோ என்று நினைத்திருந்தார்கள். சிம்மாசனத்தில் வந்து அமர்ந்த மன்னர் வேறொன்றும் கூறுமல் நேற்றுச் செந்திலினின்றும் வந்த அந்தணரைக் கொணர்க என ஆணை தந்தார். உடனே ஏவலர் விரைவில் சென்று அவரை அழைத்து வந்தார்கள். வந்த அந்தணர் அரசரை வணங்கி நின்ருர்.

நின்றவரைப் பார்த்த திக்குவிசயப் பாண்டியர் சிம்மாசனத்தினின்றும் எழுந்து வந்து செந்திலாண்டவன் திருவடிகளை மனத்தில் தியானித்த வண்ணம் திருநீற்றை வலது கையால் எடுத்து அந்தணருடைய ஒளியற்ற கண்ணில்தடவி செந்தில் பெருமான் திருவருளால் நம்கண், ஒளிபெறுவதாக என்று சொல்லி நின்ருர். அக்கணமே வேதியரின் குருட்டுத் தன்மையுடைய கண் ஒளிபெற்று விளங்கியது. இரண்டு கண்களும் தெரியப் பெற்றமையால் அவர் அரசரைக் கீழே விழுந்து வணங்கி மகிழ்ச்சிப் பெருக்கால் ஆனந்தக் கூத்தாடலானர்.

கண் தெரிந்ததை உணர்ந்த கட்டபொம்மு தன் கை வாளை அகற்றிவிட்டு ஆண்டவன் தம்மையாட்கொண்ட நிலையை உணர்ந்து கண்ணீர்வார இன்பக்கடலுள் திளைத்து நின்றார். புலவர்கண், ஒளிபெறவில்லையேல் தம் அடிமைத் திறத்தில் பிழை இருப்பதாகக்கருதி உயிர்போக்கஎண்ணியே வாளுடன் சபைக்கு வந்தார். இவ்வதிசய நிகழ்ச்சியைச் சபையிற் கூடியிருந்த யாவரும் கண்டு வியப்பில் ஆழ்ந்திருந் தார்கள். தம் அரசரிடம் ஆண்டவன்; வைத்த பெருமதிப்பை எண்ணி எண்ணி யாவரும் புகழ்ந்தார்கள்.

இவ்வாறு கண் பெற்ற மறையவருக்குத் திக்குவிசயத் துரை வேண்டிய செல்வங்களைத் தந்து சிறிது நாள் தம் அரண்மனையில் தங்கி இருக்கச் செய்தார். பல நாட்கள் சென்று அந்தகராய் வந்த வேதியர் அரசரிடம் விடைபெற் றுக்கொண்டு தமதூருக்குச்சென்று சுகமாக வாழ்ந்திருந்தார். என்னே! முருகப்பெருமான் தமதன்பனை உலகோர்க்குக் காட்டிய பெருமை.

## 11. "குறத்திக்கோர் பதக்கம் வேண்டும்"

இந்நிகழ்ச்சி நடைபெற்ற சில நாட்களின் பின் திருச் செந்திலாண்டவனைத் தெரிசித்துச் செல்ல, பாஞ்சையரசர் தமது பரிவாரங்களோடும், தமது அருமை மனைவியாரோடும் திருச்செந்தூருக்கு எழுந்தருளி வந்தார். அக்காலத்து பாஞ்சை மன்னர்கள் செந்தூருக்கு வரின் அந்நகர் பெரும் கோலாகலத்துடன் விளங்கும். ஆயிரக்கணக்கான வீரர்கள் அரசருக்குப் பாதுகாவலாக வருவர் ஒன்பதாம் திருநா ளன்று முருகப்பெருமானை எழுந்தருளச்செய்து, வழிபாடு

செய்வதற்காக எடுத்திருக்கும் தமது மணி மண்டபத்துள் தங்கி இருப்பார். வழி நெடுகிலும் வீரர்கள் அணிவகுத்து நின்று மரியாதை செய்வார்கள். திருக்கோயில் அதிகாரிகள் கோயில் விருதுகளோடும் பூரண கும்பம் முதலியவற்றோடும் சென்று வரவேற்று அழைத்து வந்து தெரிசனம் செய்து வைப்பார்கள். இம்முறைப்படி திருக்கோயிலுட் சென்று மனமொழி மெய்களால் உருகிய வழிபாடு செய்தார் அரசர், அன்று இரவும் தமது இன்னுயிர்த் துணைவியாம் மனைவியாரோடுஞ்சென்று வழிபாடாற்றினார் வழிபாட்டின் முடிவில் தம் உடம்பில் அணிந்திருந்த இரத்தினாபரணங்கள் யாவற்றையும் கழற்றி இவை எம்பிரான் தந்த உடைமைகள் ஆகையால் அவர்க்கே உரியன என்று கொடுத்தார். இதைப் பார்த்த அவர் மனைவியாம் ஆறுமுகத்தம்மையும் தான் அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றி இவைகள் எம்பிரான் தேவியாருக்கு ஆகட்டும் என்று உருகிய அன்போடு கொடுத்துவிட்டார். இங்ஙனம் தந்த பாஞ்சை மன்னரும் அரசியாரும் சிலநாட்கள் அங்கு தங்கிவிட்டுப் பரிவாரங்களோடு பாஞ்சைக்கு வந்து சேர்ந்தார்கள்.

வந்துசேர்ந்த அரசர் தம் மனைவியாரின் அருங்குணத்தை வியந்தவராய் பலநாடுகளிலிருந்து சிறந்த வைரக் கற்களைத் தருவித்து மிகுந்த விலைமதிப்புடைய ஓர் பதக்கமும் முத்து மாலை முதலிய அணிவகைகளும் செய்து மனைவியாருக்கு அணிந்து மகிழ்ந்தார்.

புதுநகைகளை அணிந்துகொண்ட அரசியார் அரண்மனை அந்தப்புரத்து தம் கணவருடன் அன்றிரவு துயில் கொண்டிருந்தபொழுது நள்ளிரவில் முருகப்பெருமான் திக்குவிசயத் துரையின் கனவில் தோன்றி அன்பனே! உன் அரசி அணிந்து

கொண்டிருக்கும் பதக்கத்திற்கு எனது குறத்தியும் ஆசைப் படுகிறாள். ஆண்டியாக இருக்கும் நான் அவ்விலையுயர்ந்த பொருளுக்கு எங்கு போவேன் என்று கூறி மறைந்தார். இதையறிந்த மன்னர் திடுக்கிட்டெழுந்து பக்கத்தில் துயில் கொண்டிருக்கும் தமது மனைவியை எழுப்பிப் பெருமான் அருளியதைச் சொன்னார். அதைக்கேட்ட அரசியார் மனம் உருகியவராய் என்னே ஆண்டவன் நம்மிடத்துக் காட்டும் அன்பு என்றுவியந்தவராய் உடனே அப்பதக்கத்தைக்கழற்றி நீராட்டி ஒருவெள்ளிப் பேழையினுள் அமைத்து மறுநாட் பொழுது விடிந்ததும் பல்லக்கில் வைத்துத் திருச்செந்தூருக்கு அனுப்பிவைத்தார்கள்.

## 12. முருகனுக்குச் செய்த கட்டளைகளும் ஆபரணங்களும்

முருகப் பெருமானுக்கும் வள்ளி தெய்வயானை அம்மையாருக்கும் அவ்வப்போது பாஞ்சை அரசர் அமைத்தனுப்பிய திருவாபரணங்கள் அளவற்றன. பொன்னாலும் மணிகளாலும் ஆக்கப்பட்ட ஆபரணங்கள் பல இன்னும் கோயில் கருவூலத்தில் வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஒரு சில காலங்களில் கோயில் நிர்வாக அதிகாரிகளால் அவற்றில் பழுதுற்ற ஆபரணங்களை அழித்து அந்தப்பொன்மணிகளைக் கொண்டு புதிதாக அணிகள் அமைக்கப்பட்டுள்ளன. பல லட்சம் பெருமான நகைகளில் ஒரு சிலவற்றையே இன்று உபயோகிக்கிறார்கள் என்று எண்ணுகிறேன். ஏனையவற்றையும் கோயில் அதிகாரிகளும் நிர்வாகக் குழுவினரும் தக்கபடி கண்காணித்து வருதல் நலம் பயப்பதாம்.

## 13. " வீரபாண்டியக் கட்டபொம்மு. "

வீரபாண்டியக் கட்டபொம்மு. இப்பெயரைக் கேட்ட வுடனேயே மேல்நாட்டு வெள்ளைக் கூட்டம் கலங்கியது. காங் கிரஸ் மகாசபை நம்நாட்டிற் கால்கொள்வதற்குப் பல்லாண்டு களின் முன்னரே அயல் நாட்டினராகிய வெள்ளையர்களை எதிர்த்துச் சுதந்திர வீரமுழக்கம் செய்தார். உடல் பொருள் ஆவி என்ற முப்பொருள்களையும் நாட்டின் உரிமைக்காகத் துறந்து அன்னியரோடு போராடி அழியாப்புகழ் பெற்றார். தமிழ் நாட்டுச் சுதந்திர வரலாற்று ஏடுகளிலே இவர்பெயரும் இளவல் ஊமைத்துரையின் பெயரும் பொன்னெழுத்துக் களால் பொறிக்கத்தக்கன. முன்பு சொல்லி வந்த திக்குவிச யத்துரையின் அருமை முதல் மைந்தரே வீரபாண்டியர்.

வீரபாண்டியரின் வீரதீரங்களைப்பற்றி இந்நூலின் இறு தியில் சுருக்கமாகத் தரலாமென எண்ணுகிறேன். எனவே பாஞ்சாலங்குறிச்சியின் கடைசி அரசராகிய வீரபாண்டியக் கட்டபொம்மு முருகப்பெருமானிடத்துக்கொண்ட பேரன் பின் திறத்தையே தலைப்பிற்குப் பொருந்த விளக்க முற்படு கிறேன்.

" மகனறிவு தந்தை அறிவு " என்ற பெரியார் வாக்கிற் கிணங்க வீரபாண்டியக் கட்டபொம்மு வீரத்திலும் செந்தி லாண்டவனிடத்துக் கொண்ட பக்திப்பெருக்கிலும் தந்தை யை ஒத்தவராய் விளங்கினார். வலிமையில் திக்குவிசையரை யும் விஞ்சியவர் என்றே கொள்ளலாம். தவத்திற் பிறந்த தவப் புதல்வராதலின் செந்திலாண்டவனிடத்துத் தம் தந்தையும் மரபினரும் கொண்டிருந்த ஆராக்காதல் இவரிடமும் அமைந் திருந்தது.

வீரபாண்டியர் தம் தந்தைக்குப்பின் கி. பி. 1790-ல்பட்டத்துக்கு வந்தார். இவருடைய மனைவியார் பெயர் வீரசக்கம்மாள். ஊமைத்துரையும் துரைச்சிங்கமும் இவருக்குத் தம்பியர். இவருடைய ஆட்சிக்காலத்தில் மக்கள் அடைந்த நன்மைகள் அளவிடலரியன. செம்மையாகச் செங்கோல் செலுத்தும் மன்னராதலின் நாட்டுமக்கள் ஆங்கிலப்போரில் அரசனை ஆதரித்து நின்று அரும்போர்செய்து வெற்றிமேல் வெற்றிகண்டார்கள். புலவர்களுக்கும் ஏழைகளுக்கும் மாரி போல வழங்கிவந்தார். விளைந்தால் சரிசல்காடு விளையவேண்டும் கொடுத்தால் கட்டபொம்மன் கொடுக்கவேண்டும். என்பது இன்னும் நாட்டுமக்களிடையே வழங்கி வருகின்ற பழமொழி.

> காராறு மாதம் மழைமாரி பெய்யு மிக்காசினியில்
> ஓராறு மாதம் அருங்கோடையாய்விடும் உற்பனம்சேர்
> சீராறு பாஞ்சைச் ஜெகவீரபாண்டியன் செங்கை
> ரெண்டும்
> ஈராறு மாதமும் பொன்மாரி பெய்யும் இரவலர்க்கே

என்பது கட்டபொம்முவின் கொடைவளத்தைக் குறித்தெழுந்த ஓர் பழம் பாடல்.

## 14. கட்டபொம்முவும் பிள்ளையன் பிள்ளையும்

இத்தகைய சிறந்த பண்புகளையுடைய வீரபாண்டியக் கட்டபொம்மு அரசாளுகின்ற சமயம் நெல்லைமாநகரில் பிள்ளையன் பிள்ளை என்ற பெரியார் ஒருவர் இருந்தார். இந் நெல்லை வட்டத்தின் சில பகுதிகள், ஆற்காடு நவாபிடம் இரவல் குத்தகைபெற்ற ஆங்கிலேயருக்குச் சொந்தமாகிஇருந்

தது அப்பகுதிகளில் வரிவசூல் செய்யும் குத்தகைதாரராகப் பிள்ளையன் பிள்ளை இருந்து வந்தார். சிற்றரசர்போன்ற பெருமை அப்பகுதிகளில் அவருக்கிருந்தது. செந்திலாண்டவனிடம் அவரும் சிறந்த பக்தராக இருந்தார். திருச்செந்தில் திருக்கோயிலில் ஆவணி மாசி என்ற இருமாதங்களிலும் பெரு விழாக்கள் நடைபெறும். ஏழாம் திருநாளன்று மூலத்தானத்திலிருக்கும் ஆறுமுகநயினார் உருவு பலகையின் மூலமாக வெளியே வந்து சண்முக விலாசத்தில் எழுந்தருளி இருந்து, திருவீதியில் உலாவருதற்பொருட்டு அங்கிருந்து புறப்பட்டு முதலாவதாகப் பிள்ளையன் பிள்ளை அவர்களால் கட்டப் பட்டுள்ள திருமடத்தில் இறங்கி வழிபாட்டை ஏற்றருளுவது வழக்கம். அன்பு மிகுந்த பிள்ளையவர்கள் ஏராளமான பொருட்செலவில் ஆண்டவனுக்குச் சிறப்பு வழிபாடு செய்வார்கள். இதுவே நடைமுறையாகவும் கட்டபொம்மு மன்னர். பெருமானிடத்துக் கொண்ட பேரன்பால் ஓர் ஆவணித்திருவிழாவின்போது ஏழாம் திருநாள் வழிபாட்டை இறைவனுக்குத் தமது மண்டபத்திலேயேசெய்ய விழைந்தார். கட்டபொம்முவின் நாவசைத்தால் இந்த நானிலம் அசையும். இறையன்பும் அதிகாரமும் உடையவராதலால் அவர் கருத்தைக் கடந்து யாதும் கூறப்பிள்ளை அஞ்சினர். "மன்னன் சொல்லுக்கு மறுசொல் இல்லை" என்றபடி எவரும் மறுத்துக் கூறத்துணிந்தாரிலர். மனம் உள்ளே வருந்தினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாது பிள்ளையும் வாளா இருந்தார். ஏழாம் திருநாட்காலை சன்னதியில் ஒரே மக்கள் கூட்டம். எங்கும் அரஹராமகாதேவ முருகா! முருகா! என்ற ஒலி வானைப் பிளக்கிறது. வாத்தியங்களின் ஓசையும் மணிகளின் நாதமும் அன்பர் குழாத்துக்கு பக்தியுணர்ச்சியைத் தூண்டுகின்றன. ஒருபுறம் பரிவாரங்களோடு கட்டபொம்முவும் ஒரு

புறம் பிள்ளையன் பிள்ளையும் ஆண்டவன் திருமுன்பு "உச்சிக் கூப்பிய கையினராய்" நின்றுகொண்டிருக்கிறார்கள். ஆராதனை முதலிய வழிபாடுகளெல்லாம் சிறப்பாக நடைபெற்றன. முடிவில் அர்ச்சகர்கள் திருவுருவத்தைப் பலகையில் இறக்கிக் கொணர்வதற்காக எடுக்கமுயன்றார்கள். பலமுறை முயன்றும் திருவுருவத்தை அவர்களால் நகர்த்த முடியவில்லை. போற்றிகளும் பட்டர்களுமாகப் பலர் கூடியும் அசைக்கமுடியவில்லை காரணம் அறியாது விழித்தார்கள். மேலும் மேலும் முயன்றார்கள். பலமணி நேரங்கள் வீணாகியும் பயன் ஒன்றும் காணாது திகைத்தனர். இச்செயலைக் கண்ட பிள்ளையன் பிள்ளை உள்ளூர மனமகிழ்ந்தார். ஆண்டவன் தன்பால் வைத்துள்ள கருணையை நினைந்து கண்ணீர் வடித்தார்.

இவற்றையெல்லாம் கண்ணுற்ற கட்டபொம்மு இன்று ஆண்டவனுக்கு நம் திருமடத்தில் எழுந்தருளும் விருப்பம் இல்லைபோலும் என்று மனத்துள் எண்ணியவராய் பிள்ளையன் பிள்ளையைப் பாத காணிக்கை வைத்து அழைக்குமாறு கூறினார். இதைக்கேட்ட பிள்ளை பெருமகிழ்ச்சி கொண்டு காணிக்கை செலுத்திக் கனிந்து நின்றார். உடனே எம்பெருமான் எளிதாக இருக்கையை விட்டுப் புறப்பட்டு சண்முக விலாசத்தில் வந்து அலங்காரம் செய்யப் பெற்று பிள்ளையன் பிள்ளை மடத்துக்கு எழுந்தருளினார். இத்திருமடம் திருக்கோயிலுக்கு அண்மையில் மணல் மேட்டு இறக்கத்தில் முதலாவதாக அமைந்துள்ளது. தம்மிடம் பேரன்பு கொண்டவர் கட்டபொம்மு வாயினும் முறைமாறு படுதல் கூடாது என்பது ஆண்டவன் திருவுள்ளம் போலும்! ஆண்டவன் திருக்குறிப்பை எவரும் உணருதல் அரிதாதலாலும் பெருமானிடத்துக் கொண்ட பேரன்பாலும் தம் மண்டபத்தில் இன்று எழுந்

தருளும்படி செய்ய வேண்டும் என்ற எண்ணமே அரசரிடம் மீதூர்ந்து நின்றது. எனவே பிள்ளையின் மடத்துக்கு நேராகத் திருவுலாவரும் பொழுது பெருமழைபெய்ய ஆரம்பித்ததுஎவ்வளவு நேரம் தாமதித்தும் மழைவிடாதபொழுதுதான் இறைவன் திருக்குறிப்பை வீரபாண்டியர் முற்றும் உணர்ந்து கொண்டார். பிள்ளையின் மடத்தில் எழுந்தருள இசைவு தந்தார். அவ்வாறே பிள்ளையன் பிள்ளை முருகப்பெருமானைத் தமது திருமடத்தில் எழுந்தருளச் செய்து, சிறப்பாக வழிபாடாற்றி மகிழ்ச்சி மீக்கொண்டார். வழக்கம்போல் ஒன்பதாம் திருநாளன்றே குமரப்பெருமான் கட்டபொம்மு மண்டபத்தில் எழுந்தருளினர் அன்றுமுதல் இன்றுகாறும் பழைய முறைப்படியே நடைபெற்று வருகின்றது.

## 15. தண்டயம் முறிந்தது.

வீரபாண்டியக் கட்டபொம்முவின் காலத்து ஆங்கிலேயரோடு முப்முரமான போர் ஆரம்பமாயிற்று. அடிக்கடி படையெடுப்பு நேர்ந்து பாஞ்சைக்கோட்டை தாக்கப்பட்ட காலங்களிலும்கூடச் செந்திலாண்டவன் கோயில் விழாக்களுக்கு வந்து வழிபாடு செய்யக் கட்டபொம்மு தவறினரில்லை. இரண்டாவது முறையாகக் கோட்டையின் மேல்பானர்மேன் படைஎடுத்தபோதுங்கூட ஊமைத்துரையும் ஏனையோரும் திருச்செந்தூரில் தொடங்கிய விழாவுக்குச் சென்றிருந்தார்கள். படைகள் கோட்டையில் அதிகமில்லாதிருந்தும் கூடச் செந்திலாண்டவன் திருவருள் திறந்தால் பானர்மேன் படைகள் தோற்றோடும்படிசெய்து வீரபாண்டியர் வெற்றி கண்டார். ஒருக்கால் ஆவணி மாதம் திருச்செந்தில்கோயில் உற்சவம் தொடங்கிற்று. பாஞ்சையில் போர்நடவடிக்கைகள்

முழுமுரமாக நடந்துகொண்டிருந்த காலம அது. திருநாள் தொடங்கியதை உணர்ந்திருந்த வீரபாண்டியர் வேலை மிகுதி யால் தொடக்க விழாவுக்கு வரக்கூடாதநிலையில் இருந்தார் எனினும், தம் மண்டபத்தில் இறைவன் எழுந்தருளுகின்ற ஒன்பதாம் நாளன்று செந்திலுக்கு வந்து ஆண்டவனைச் சேவிக்க எண்ணங்கொண்டிருந்தார் நெருக்கடியானசந்தர்ப்ப மானதால் எவ்வாறோ நாட்களைத் தவறாகக் கணித்து ஒன்ப தாம் திருநாள் நடக்கும் நாளை எட்டாம் திருநாள் என்று நினைத்துவிட்டார். அன்று ஒன்பதாம் திருநாளாய் இருக்க வும் அரசர் செந்தூர் பயணத்திற்கு ஆயத்தம் செய்ய உத்தர விடாததை எண்ணிய அமைச்சர் சிவசுப்பிரமணியபிள்ளை அச்சந்தர்ப்பத்தில் அரசரிடம் அதை நினைவுறுத்த அஞ்சினா ரெனினும், மறதியை நினைவுறுத்தாத குற்றம் தன்னைச் சாரும், அரசரும் கோபங்கொள்ளலாம் என்று எண்ணியவ ராய் ஒன்பதாம் திருநாளன்று காலை 11 மணிக்கு வீரபாண்டி யரிடம்மெதுவாக அணுகி அன்று ஒன்பதாம்திருநாள் என் பதை நயத்தோடும் பயத்தோடும் மெதுவாக உரைத்தார். அதைக்கேட்ட அரசர் திகைப்படைந்தவராய் நாளை எண்ணி அன்றுதான் ஒன்பதாம் திருநாள் என்பதை உணர்ந்து யாது செய்வதென்று தெரியாமல் மயங்கி இருந்தார். குதிரை ஏறிச் செல்வதானால் உடனே சென்று சேர்ந்துவிடலாம் தமது மனைவியாகிய பட்டத்து அரசியாரை உடன் கூட்டிச் செல்வதே வழக்கமாகையால் அவர்கள் செல்லும் பல்லக்கு இரவு ஏழு மணிக்குள் செந்தூர் சென்று சேர்தல் இயலாத காரியம். இதையெல்லாம் நெடுநேரம் யோசித்த வீரபாண்டி யர் பல்லக்குத் தூக்குபவர்களை விரைவாக அழைத்துவருமாறு தமது ஏவலர்களை ஏவினார்.

அவர்கள் வந்து சேர்ந்ததும் இன்று ஒன்பதாம்திருநாள் சுவாமி நம் மண்டபத்தில் இறங்குவதற்கு முன்பாகச் சென்று சேரவேண்டும். விரைவில் பல்லக்கைத் தயார்செய்து கொண்டுவாருங்கள் என்று கட்டளையிட்டுவிட்டு புறப்பட வேண்டிய ஆயத்தங்களைச்செய்து படைவீரர்கள் புடைசூழ மந்திரி பிரதானியர் உடன்வர வெண்பரியேறி மாலை மூன்று மணியளவில் வீரபாண்டியர் செந்திலம்பதிக்குப் பயணமானார் எவ்வளவு விரைவாகச் சென்றும் இடைவழியிலேயே சூரியன் மறைந்து இருள் தோன்றிவிட்டது. இரவு ஒன்பதுமணியும் கடந்துவிட்டது இனி நாம் இறைவன் எழுந்தருளுவதற்கு முன்சென்று சேரஇயலாது என்று கண்ட அரசர் மனம் மிக வருந்தினார். ஒருக்காலும் நேராதபிழை நேர்ந்ததை எண்ணிக் கவலை கொண்டார். எனினும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ஆறுமுகப் பெருமான் திருவடிகளை மனத்தில் நினைத்து பெருமானே! நீ எம் மண்டபத்தில் எழுந்தருளுவதன் முன் யாங்கள் உன்னைத்தரிசிக்கவந்து விட்டால் யான்கொண்டுவரும் உடைமைகளை எல்லாம் உனக்கு காணிக்கையாகத் தந்துவிடுகிறேன். எனக்கு அருள்செய்ய வேண்டும் என்று எண்ணி வணங்கியவராய்ப்பயணத்தை விரைந்துநடத்தலானார்

இது இங்ஙனமாக; அடியார்களுக்குத் தரிசனம் தரத் திருவீதி எழுந்தருளி மண்டபங்கள் தோறும் இறங்கி அன்பர்கள் செய்யும் வழிபாட்டை ஏற்றருளும் முருகப்பெருமான் அன்று திரு உலாப் போந்து கட்டபொம்முவின் திருமண்டபத்தில் எழுந்தருளும் நாளாகையால் இரவு ஒன்பது மணியளவில் சீர்பாதம் பிடிப்பவர்கள் சப்பரத்தை சுமக்க அடியார் கூட்டம் முருகா! முருகா! என்று ஒலமிட, தீவர்த்திகள் இரவைப் பகலாக்க மணியணிகள் ஒளிவீச மாடவீதியின்

மேல் முக்கில் சப்பரம் திரும்பியது. திரும்பும் சமயம் சட சட என்ற ஒலி யாவர் காதிலும் விழுந்தது. அடியார்கள் யாது நேர்ந்ததோ என்று அஞ்சினார்கள். சீர்பாதம் பிடிப்பவர்கள் தண்டையம் முறிந்துவிட்டதை உணர்ந்து சப்தமிட்டார்கள். எல்லோரும் சேர்ந்து மெதுவாகச் சப்பரத்தைக் கீழே இறக்கினார்கள். கோயில் அதிகாரிகள் உணர்ந்து திருவுலாத் தடைப்பட்டதை எண்ணி உளைந்தார்கள் அக்காலங்களில் சப்பரத்தின் தண்டையங்கள் சேதப்பட்டு விட்டால் ஆற்றூருக்கு ஆள் அனுப்பி வேறு தண்டையங்கள் சேகரித்து வருவது வழக்கம். அதன்படி தண்டையம் வாங்கிவர ஆட்கள் அனுப்பப்பட்டனர். அதுவரை இறைவன் கட்டபொம்முவின் மண்டபத்தை நோக்கி இருந்துவிட்டார். என்னே! இறைவன் கருணை. அடியார்கள் கருத்தை முற்றுவிப்பதே ஆண்டவன் திருவுளம் என்பதை இச்செயல் நமக்குத் தெற்றென விளக்குகிறதன்றோ! கணி கண்ணன் செல்ல அவன் பின்னே அரவப்பாய் சுருட்டிஆழியான் சென்றதும், இடைக்காடனுக்காக சோமசுந்தரப் பெருமான் கோயிலைவிட்டுவெளியேறி வைகையின் மறுகரையில் கோயில் கொண்டதும்அன் பின் திறத்தாலன்றோ? அது போன்று கட்டபொம்முவின் அன்பை உலகுக்கு காட்டவும் தம் அருள்திறத்தை அவர் அறிந்து உய்யவுமே ஆண்டவன் இந்தத் திருவிளையாடலை செய்தருளினான் போலும்! மணிகள் பல கடந்தன. பொம்முவின் வரவுக்காகச் செம்மலும் காத்திருந்தார்.

ஆண்டவன் திருவுலாக் காட்சியைக் காணமுடியாது போய்விட்டதே என்ற வருத்த மிகுதியால் சோர்வடைந்த கட்டபொம்முவும் பரிவாரங்களும் இரவு பதினொருமணியளவில் செந்தூருக்கு வந்துசேர்ந்தார்கள். கோவிலதிகாரிகளும்

தலத்தாரும் அவரை எதிர்கொண்டழைத்து வரவேற்றார்கள் மண்டபத்தில் வந்திறங்கிய அவர் அங்கு நடந்த நிகழ்ச்சி களைக் கேள்விப்பட்டு பெருவியப்படைந்தார். எம்பெருமான் அருளை எண்ணி எண்ணி உருகினார். தம்கருத்தை முற்று விப்பான் வேண்டியே இறைவன் இத்தடங்கலைச் செய்தருள் ளான் என்பதைக்கருதி பெருமகிழ்ச்சியடைந்தார். இந்நிலை யில் ஆற்றாரிலிருந்து தண்டையம்வர அதைச் சப்பரத்தில் பிணைத்தார்கள். பொம்முவின் மண்டபத்தில் இறைவன் எழுந்தருளினான். என்றுமில்லாத சிறப்போடு கட்டபொம்மு அன்று இறைவனுக்கு வழிபாடுசெய்தார். தாம் கருத்தில் நினைத்தபடி தாம் கொண்டுவந்த பல்லக்கு முதலிய உடை மைகளை எல்லாம் செந்திலாதிபருக்கு சேரும்படி தந்து மகிழ்ந்தார். அங்கு சிலநாள் தங்கி வழிபாடு செய்து பரி வாரங்கள் சூழ பாஞ்சைப் பதிக்கு வந்துசேர்ந்தார்.

## 16. நிலைப்பான கொடைப் பொருள்கள்

இங்ஙனம் செந்திலாதிபனிடத்துக் கொண்ட பேரன்பால் வீரபாண்டியரும் அவர் முன்னோர்களும் திருச்செந்தில் திருக் கோயிலிக்குத் தந்த புண்ணியக் கொடைப் பொருள்கள் எண் ணில்லாதன. ஸ்ரீவைகுண்டம் வட்டத்தில் தற்போதுள்ள சிலுக்கன்பட்டி என்ற கிராமத்திற்கு அண்மையில் 316 ஏக் கர் கரிசல்நிலம் ஆண்டவன் பணிக்காக அளித்துச் செந்திலா திபன் பண்ணை என்று பெயரிட்டார்கள். அது இன்றளவும் செந்திலாதிபன் பண்ணை என்றே மக்களால் வழங்கப்பட்டு வருகிறது. பாலாபிஷேகத்திற்காக வர்த்தகரெட்டிபட்டிக் கிராமத்தில் இருபத்திஆறுகோட்டை விரைப்பாடுகளடங்கிய ஒரு தனிக்குளமே விடப்பட்டிருக்கிறது. அதற்கு அப்புண்

ணியப் பகுதியின் காரணமாகப் பாலாகுளம் என்று இன்றள வும் வழங்கி வருகிறது. மற்றும் பொன்னாலும் மணியாலும் செய்தளிக்கப்பெற்ற ஆபரணங்கள் மூன்று லக்கத்தின் மேலும் பெருமதிப்புடையவை. கோயில் கருவூலத்தில் இன் றும் இருப்பதைக்காணலாம். திருவிழாக் காலங்களில் அவற் றில் ஒருசிலவே இறைவனுக்கு எடுத்தணியப் பெறுகின்றன. ஏனையவை சிதைந்தும் முறிந்தும் பழுது பார்க்கப் படாமல் கிடக்கின்றன போலும்.

## 17. ஏனைய தருமங்கள்

பாஞ்சை அரசர்களில் பெரும்பாலோர் ஒப்புயர்வற்ற ஞானிகளாய் இருந்துள்ளனர். உலகியல் வாழ்க்கையை பெரிதாக அவர்கள் மதித்தவரல்லர். கொடையும் வீரமும் இறைவனிடத்துச் செய்யும் அன்புமே தங்கள் உயிர்வாழ்க் கையின் லட்சியமாகக் கருதிப் பாராண்டு வந்துள்ளார்கள் என்பதை அவர்கள் வரலாற்றின் மூலம் நன்கு அறிந்து கொள்ளலாம். சமயத்தில் அசையாத நம்பிக்கை இருந்தது போல சமய வேற்றுமைகளும் அவர்களிடம் காண்டல் அரி தாம். சைவம், வைணவம் என்ற பாகுபாடின்றி எல்லாச்சம யத்தையும் அவர்கள் ஆதரித்து வந்துள்ளார்கள். ஆழ்வார் திருநகரி என்ற திருத்தலத்தில் ஆதிநாதாழ்வார் சன்னதிக்கு வெள்ளைமடம் என்ற கிராமத்தில் 27 கோட்டை விரைப் பாடு விட்டுச் சாதனம் எழுதி வழங்கியுள்ளார்கள். திருக் கோவிலுக்கு முன்பு ஓர் பெரிய மண்டபத்தை அழகுறஆக்கி இருக்கிறார்கள். இன்று அம்மணிமண்டபத்தில் சமஸ்கிருத வேதபாராயணம் நடைபெற்று வருகிறது. ஆத்தூர் என்னு மிடத்தில் ஓர் சிறந்த மண்டபமும் அதனுள் விநாயகப்பெரு

மான் ஆலயத்தையும் அமைத்து நித்திய பூசை நடப்பதற்காக ஆறுகோட்டை விரைப்பாடுவரை வழங்கி நடைமுறைச் செயல்களைச் செய்ய ஒருவரை நியமித்துச் சாசனம் செய்து தந்துள்ளார்கள். அது இன்றளவும் நடைபெற்று வருகிறது. கோயில்பட்டித் தாலூகா பசுவந்தனை என்ற கிராமத்தில் ஓர் திருக்கோயில் எடுத்துப் போதிய நிலபுலன்களை அதன்நடை முறைக் காரியங்களுக்கு நியமித்திருக்கிறார்கள். அங்கு எழுந்தருளியுள்ள சுவாமிக்குக் கைலாசநாதர் என்றும் தேவிக்கு ஆனந்த உமை என்றும் திருநாமங்களாம். "தென் பசுந்தாபுரிக் கைலாசநாதரைத் தேவியானந்த உமையை சிந்தைதனில் அனுதினம் மறவாதவன்" என்று "கட்டபொம் முவை ஓர் பழம் பாடல் குறிக்கிறது" இங்ஙனம் கட்ட பொம்மு செய்துள்ள தருமங்கள் எண்ணில்லாதன. அன்றி புலவர்கட்கும் தக்கவர்கட்கும் வழங்கியுள்ள நிலக்கோட்டை களும் தானப்பொருள்களும் வரையறை இல்லாதன ஒன்றை உதாரணத்திற்காக இங்கே தருகிறேன்.

## 18. "மாவு மீன்"

வீரபாண்டியக் கட்டபொம்முவின் தந்தையான திக்கு விசயத்துரை சிறந்த தவ ஒழுக்கம் உடையவர் என்பதை முன்னமேயே கூறினேன். அவர் ஒருக்கால் தம் பரிவாரங் களோடு வல்லநாடு என்னும் கிராமத்துக்குச் சென்று திரும்பு கிற வழியில் இராமநாதபுரம் என்னும் குக்கிராமத்தில் நண் பகல் உணவுக்காகத் தங்கினார். அவ்வூரின் கண், ஒரு அந் தணர் இல்லமே இருந்தது. படை வீரர்களுக்கெல்லாம் உணவு தயாரித்து வழங்கப்பட்டது. திக்குவிசையருக்கு மட்டும் அவ்வேதியர் உணவு சமைத்துக்கொணர்ந்து பரிமாறி

ளுர். இதற்கிடையில் உணவு அமைத்த அப்பிராமணர் தம் மனத்தில் ஏதோ ஒன்றைக்கருதியவராய், அரிசிமாவினுல் மீன்போன்ற ஒரு உருவத்தைச் செய்து அதைப்பக்குவமாக எண்ணெயிலிட்டு நன்ருய்ப் பொரித்தெடுத்து வைத்துக் கொண்டார். அரசர் ஒருவாய் உணவு உண்டபின் அம் மீன் போன்ற உருவத்தை எடுத்து இலையில் போட்டு விட்டார். திடீரென்று தாம் உண்ணும் உணவில் மீனையிட்டதைக் கண்ட அரசர் விரைவாகச் சினங்கொண்டார். பிராமணராய் இருந்தும் சைவ உணவே கொள்ளும் தமக்கு அவர் செய்த கொடுஞ் செயலை எண்ணிய போது மனந்தாளவில்லை. உண்மையை உணராமையால் உணவுண்டதமது வலக்கையால் அப்பிராமணரை ஓங்கி ஓர் அடி கொடுத்துவிட்டார். இதை எதிர்பாராத வேதியர் அடியால் மயக்கமுற்றுக் கீழே உட்கார்ந்துவிட்டார். சிறிதுநேரம் கழித்து உணர்ச்சிபெற்று மகாராஜா! மன்னிக்கவேண்டும் அது உண்மை மீனல்ல மாவினுல் யான் செய்த செயற்கைமீன் தங்களை வியக்கச் செய்ய வேண்டுமென்று இவ்வாறு செய்தேன். என்று கூறினின்ருர். அரசரை வியக்கச்செய்து பரிசில் பெறும் கருத்திலேயே அப்பிராமணர் அவ்வாறு செய்திருக்கிருர். பாவம் விளைவு வேறுவிதமாய் இருந்துவிட்டது. உண்மையை உணர்ந்த பாண்டியர் தம் செயலுக்காக வருந்திஞர். பாவம் பிராமணரை அடித்துவிட்டோமே என்று மனம்மிக உளைந்தார். இறுதியில் அவ்வந்தணருக்கு மகிழ்ச்சிதர அவ்வூருக்குப் பக்கத்தில் நன்ருன கரிசல் நிலத்தில் இருபது ஏக்கர்நன் கொடை தந்து அனுபவித்துக் கொள்ளும்படி ஏற்பாடு செய்துவிட்டு பாஞ்சைக்குச் சென்ருர். அடிபட்டாலும் ஆசை நிறை வேறியமைக்காக வேதியர் மகிழ்ந்தார். அவர் பரம்பரையினர் இன்னும் அதை அனுபவித்து வருகின்றனர்.

அரசு அழிந்தும் அவர்செய்த தானம் அழியாது நிலைபெற் றுள்ளது.

## 19. கருவூலச் சோக்கர் காட்சி

வீரபாண்டியக் கட்டபொம்முவும் அவர் முன்னோரும் செந்திலாண்டவனுக்குக் காணிக்கையாகத் தந்த பொருள் களைப் பற்றி முன்பகுதிகளிற் கூறினேன். கோயில் கருவூலத் தில் அவர்தந்த மணியணிகளோடு வீரப்பாண்டியர் வைத்துப் பூசித்த திருவுருவங்களும் இருப்பதாகத்தெரிகிறது. இத்திரு உருவங்கள் இருப்பதைத் திருக்கோயில் ஆட்சிக்குழு உறுப் பினராய் அமைந்துள்ள T. K. அறம்வளர்த்த நாதபிள்ளைய வர்கள் தெரிவித்தார்கள். இவர்கள் திருச்செந்திலம்பதியில் சைவ வேளாண் மரபில் பிறந்தவர்கள். செம்மை சான்ற பண் புடையாளர். பரம்பரையாய் உயர்ந்தகுடியில் தோன்றிய வர்கள். அரசாங்கத்தில் ஆவணப்பதிவு இலாகாவில் (சப்ரிஜிஸ் டிரார்) பணியாற்றித் தற்போது ஓய்வு பெற்றிருப்பவர்கள். இவர்கள் உடன் பிறந்தவர்கள் உயர்தர அரசாங்க அலுவல் களில் அமர்ந்துள்ளனர். தற்போது எண்டோமெண்டு போர்டு கமிஷனராய் அமைந்து தமிழ்நாட்டிலுள்ள திருக் கோயில்களிலெல்லாம் அரும் பெரும் சீர்திருத்தங்களைச் செய்து தமிழகத்தை தெய்வத் திருநாடாகத்திகழும்படிசெய் யப் பணியாற்றிவரும் உயர்திரு. சங்கரவடிவேலுப்பிள்ளை அவர்களும் அண்மையில் தஞ்சை ஜில்லாக் கலெக்டராக இருந்து மேலும் உயர்வு பெற்றுள்ள உயர்திரு. பழனியப் பன் அவர்களும் இவர் உடன்பிறந்தோராவர். ஓய்வு காலத் தைத்தெய்வப் பணியிலேயே கழிக்கக் கருதிய அறம்வளர்த்த நாதபிள்ளையவர்கள் செந்திலாண்டவன் திருக்கோயிலுக்குச்

செய்துவரும் தொண்டுகள் பலவாம். ஆட்சிக்குழுவில் அங்கம் வகித்துத் திட்டமிடுவதோடு நின்றுவிடாமல், திருக்கோயில் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு காரியங்களையும் நன்கு கவனித்து வருவாய்களைப் பெருக்கித் திருப்பணிகளைச் செம்மைசெய்து தரிசனத்துக்கு வருகிற பல்லாயிரக் கணக்கான அடியார்களுக்கும் யாத்ரீயர்களுக்கும் வேண்டிய சௌகரியங்களையும் செய்தல் போன்ற பணிகளைச் செய்து வருகிறார்கள் ஒரு கால் கோயில் கருவூலத்திலுள்ள அணிகள் முதலிய பொருள்களைக் கோயிலார் பார்வையிடும்பொழுது கட்டபொம்முவால் கொடுக்கப்பட்ட பொருள்களோடு இரும்பு போன்ற நிறமுடைய ஒருபொருளும் இருப்பதை திரு அறம் வளர்த்தநாத பிள்ளையவர்கள் கண்டார்கள். அதைக்குறித்து கோவில் அர்ச்சகர்களையும் மற்றவர்களையும் கேட்டபொழுது இரும்பால் செய்யப்பட்ட இப்பொருள் கட்டபொம்முவால் கொடுக்கப்பட்டுள்ளது என்று மறுமொழி தந்தார்கள். அதை கேட்ட பிள்ளையவர்கள் அது இன்ன தென்பதை நன்றாக அறியவேண்டும் என்பதற்காக மேலே படிந்திருந்த துருக்களை யெல்லாம் தக்கசாதனம்கொண்டு போக்கிவிட்டுப் பார்க்கும்பொழுது அதுவெள்ளியால் ஆனது என்பதையும் பள்ளியறைக்கு வைக்கின்ற (சொக்கர்) திருவுருவமாகவும் இருப்பதைக் கண்டு யாவரும் வியந்தார்கள். முழுதும் வெள்ளியால் ஆக்கப்பட்ட இந்தத் திருவுருவம் நிறுத்து அளவிடும்பொழுது நாநூறு ரூபாய் எடை இருந்ததாம். கவனிப்பார் இன்மையால் துருப்பிடித்து உபயோகமற்றதாகிவிட்டது தற்கால விலையில் சுமார் எண்ணூறு ரூபாய் பெறுமானமுள்ள சொக்கர் திருவுருவம். அதுவும் சரித்திரசம்பந்தமுடைய திருவுருவம். வீணாகக் கிடப்பதைச் சகியாத அறம் வளர்த்த நாதபிள்ளையவர்கள் அதைப் பள்ளியறைக்குவைத்து

உபயோகப் படுத்தவேண்டிய முயற்சிகளைச் செய்தார்கள் பிறை முதலியவைகளெல்லாம் இருநூறு ரூபாய் களுக்கும் மேலாகச் செலவிட்டு அமைத்தார்கள். சரித்திர முக்கியத் வம் வாய்ந்த அந்தச் சொக்கர் திருவுருவத்தை ஓர் நல்ல நாளிலே வேண்டிய சிறப்புக்களையெல்லாம் செய்து மக்களெல் லாம் தரிசித்து மகிழ்ச்சியடையும்படி திருநாட் போன்று கொண்டாடி பள்ளியறையில் எழுந்தருளும்படி செய்தார். இதைச் செய்வதற்காக அறம்வளர்த்த நாதபிள்ளையவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சியும் பட்ட சிரமங்களும் மிகப்பல. எடுத்த காரியத்தை மிக உறுதியுடன் செய்து முடிப்பதில் அவருக்கு இணை அவரே. தென்னாட்டுச் சரித்திரத்தில் அழியாத இடம்பெற்ற கட்டபொம்முவின் தருமசாதனங் களுக்கு விளக்கந்தந்த பெருமை இன்று அறம்வளர்த்த நாத பிள்ளையவர்களையே சாரும்.

## 20. "வாய்க் கோடரி"

புலவர் பலர் பாஞ்சை அரசவையில் மருவி இருந்தனர் பகைவர் நடுங்கும் வீரமுடையராயினும் வீரபாண்டியர் புல வர்களிடத்து மிகுந்த வாஞ்சைகொண்டிருந்தார். சிறந்தபக்தி அறிவின் முதிர்ச்சியால் உண்டாவதல்லவா? எனவே அறிவு சான்ற புலமையாளர் பலரைக் கேண்மையாகக் கொண்டு ஆதரித்துவந்தார். அவருள் வீரபாண்டியப் புலவர் என்பவர் ஒருவர். பானர் குலத்தவர் தூத்துக்குடியைப் பிறப்பிடமாகக் கொண்டவர். அவரும் கட்டபொம்முவைப்போல் முருகப் பெருமானிடத்து மிகுந்த அன்பு பூண்டவர்; சிறந்த ஒழுக்க சீலர்; ஆதலால் பழங்கால முனிவர்களைப் போல வாக்குப் பலிதம் உடையவர்; அவர் பிறந்த ஊராகிய தூத்துக்குடியில்

பரதவர் தலைவனைக் காணச்சென்று அவன் இவரைப் பார்க்காது அவமதித்தமையால் அவனுக்கு முன்னே கட்டப்பெற்றிருந்த திறை இரும்புவளையத்தோடு அற்றும் விழும்படி பாடியவர். அவ்வூர் பாகம் பிரியாள் கோயிலில் கட்டியிருந்த பெரிய மணியின் நாக்கு அற்றுவிழும்படி ஒருகால் பாடிவிட்டார். இத்தகைய வாக்குவன்மை படைத்த வீரபாண்டியப் புலவர் ஒருமுறை அரசரோடு திருச்செந்தூருக்கு வந்தார். வரும் வழியில் புளியமரமொன்றின் கொம்பு மிக நீளமாகப் பாதையின் மேலாகக் குறுக்கே சென்றிருந்தது. அது பல்லக்குகள் செல்வதற்கு இடையூறாய் இருந்தமையால், அதை வெட்டிவிடுவதே நல்லது என்று அரசர் எண்ணினார். ஆனால் படைவீரர்களிடம் போர் செய்தற்குறிய ஆயுதங்கள் இருந்தனவே தவிர மரம் வெட்டுவதற்குறிய கருவிகளொன்றுமில்லை இதைஉணர்ந்தஅரசர் பக்கத்துக்கிராமத்தில்சென்றுகோடாரி வாங்கி வருமாறு படைவீரரில் ஒருவனுக்குக் கட்டளையிட்டார். இதை உணர்ந்த புலவர் அரசனை அணுகி மகாராஜா! வாய்க்கோடாரி இங்கு இருக்க கைக்கோடாரியை ஏன் தேடுகிறீர்கள். முறியவேண்டிய இடத்தில் குறியிடுங்கள்; அடியேன் முறியும்படி செய்கிறேன் என்றார். இதைக் கேட்ட அரசர் வியப்புக்கொண்டு புலவரைச் சோதிப்பதற்காக வெட்டவேண்டிய இடத்தில் குறியிடச்செய்தார். புலவர் சிறிது நேரம் மௌனமாக இறைவனை மனத்தில் தியானஞ்செய்து நின்று பாடத்தொடங்கினார். " எப்பொழுதும் செந்தூர்க் கிறையவா இப்புளியங் - கொப்பொடிய வேண்டும். குருபரா! பாட்டு இரண்டு அடிகள்தான் என்ன ஆச்சரியம். கொப்பு குறித்த இடத்தில்முறிந்துவிழ்ந்தது பார்த்தார்கட்டபொம்மு புலவரை அப்படியே தழுவி மகிழ்ந்தார் செந்திலாண்டவன் திருவருள் திறத்தை இருவரும் நினைந்து வியப்பிலாழ்ந்தார்கள். பெருமானைச் செந்தியில் சென்று சேவித்தார்கள்.

## 21. வரி மறுத்தல்

இங்ஙனம் இறையன்புமாறு இறைவனைத் தன்னேரில்லாத் தனிப்பெரும் தலைவனை எந்நாட்டாரும் புகழத் தென்னாட்டில் ஆட்சிசெய்த வீரபாண்டியக் கட்டபொம்மு பாஞ்சாலங்குறிச்சி அரசர் பரம்பரையில் நாற்பத்தி ஏழாவது அரசர் என்பதை முன்னமே கூறினேன். இவர் காலத்தில் தான் ஆங்கிலேயர்கள் தென்னாட்டில் கால் வைத்துத் தங்கள் ஆதிக்கத்தை விரித்தார்கள். அதிகார வெறி கொண்ட அக் கூட்டத்தார் ஆற்காடு நவாபுக்கு கடன் தந்து தென்னாட்டில் வரி வசூலித்துக்கொள்ளும் உரிமையைப் பெற்றார்கள். நயத்தாலும் பயத்தாலும் இந்நாட்டிலுள்ள அரசர்கள் ஜமீன்தார்களிடம் எல்லாம் கப்பம் பெற்று மேலதிகாரம் செலுத்தலானார்கள்.

கட்டபொம்முவிடமும் கப்பம்பெற விழைந்து பல முறை தூதுவர்களையும் தளபதிகளையும் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பி வரி வசூலிக்கும்படி தூண்டினார்கள். வரி என்று கேட்கவந்தவரிடம் அரியெனச் சினந்தார். கட்டபொம்மு ஆலன் துரை மகன் பாஞ்சைக்குவந்து வரிதருமாறு வற்புறுத்தினான். அதற்கு மறுமொழி தந்த கட்டபொம்மு வானம் பொழிகிறது பூமி விளைகிறது, நாட்டு மக்களின் நலன்கருதி யான் ஆட்சிசெய்கிறேன். உங்களுக்கு எதற்காக நான் கப்பம் தரவேண்டும், என் தாய் நாட்டில் ஆட்சி செய்ய உங்களுக்கு வரி செலுத்துவதா? ஊர்பேர் தெரியாத நாடோடிகள் நாடாளும் மன்னனுக்குக் கப்பம் விதிப்பதா? என்ன பேதமை! தானம் என்று கேட்டால் வேண்டிய மட்டும் தருவேன், வரி என்றால் என்வாள் முனை உனக்குப்பதில்

சொல்லும். உன் தலைவர்களிடம் சென்று யான் கூறியதைச் சொல், தாமதித்தால் உன்உயிர் போய்விடும். போ வெளியே என்று வெகுண்டெழுந்தார். அச்சங்கொண்ட ஆலன்துரை தலைபிழைத்தது தம்பிரான் புண்ணியம் என்று குதிரையேறி விரைவாகச் சென்றுவிட்டான். திருநெல்வேலியில் சென்று தன் மேலதிகாரிகளிடம் நடந்ததைச் சொன்னான்.

அதைக் கேள்விப்பட்ட ஆங்கில அதிகாரிகள் கட்டபொம்மு வரிதர மறுத்ததைக் குறித்து திருச்சி, சென்னை இவற்றிலுள்ள தலைமை நிலையங்களுக்குத் தகவல் போக்கினார்கள்.

## 22. சாகிசன் சந்திப்பு

கடிதத்தைக் கண்ட மேலதிகாரிகள் சாகிசன் என்ற வெள்ளைக்காரனைத் திருநெல்வேலி, இராமநாதபுரம் என்ற ஜில்லாக்களுக்குக் கலெக்டராக நியமித்து கட்டபொம்மு விடம் கம்பெனி ஆணையைக்கூறி நயத்தாலும் பயத்தாலும் வரி வசூலிக்குமாறு அனுப்பினார்கள். மேலதிகாரிகளின் ஆணையை ஏற்றுக்கொண்ட சாகிசன் திருநெல்வேலியில் வந்து அமர்ந்து தம்மைச் சந்திக்குமாறு பாஞ்சைக்கு ஆள் மூலம் கடிதம் விடுத்தான். கடிதம் கண்ட கட்டபொம்மு தம்பி ஊமைத்துரை முதலானவர்களோடு ஆலோசித்தார். வெள்ளையர்கள் சூழ்ச்சிக்காரர்களாதலால் அங்கு போவது சரியல்ல என்று அவர்கள் கூறினார்கள். எனினும் கலெக்டரின் கருத்தை அறிந்து வருவது நலமெனக்கருதிய வீரபாண்டியர் தம்பிக்குச் சமாதானம் கூறிப்படைவீரர்களோடு புறப்பட்டு நெல்லைக்குச் சென்றார். கட்டபொம்மு படைவீரர்களோடு வந்திருப்பதை உணர்ந்த கலெக்டர் வஞ்சகக் கருத்தால் குற்றாலத்தில்வந்து தம்மைச் சந்திக்குமாறு ஆள் மூலம்

செய்தி அனுப்பிவிட்டு திருக்குற்றாலத்திற்குச் சென்று விட்டான்.

வெள்ளையன் உள்ளக்கருத்தை ஒருவாறு ஊகித்துக் கொண்ட வீரபாண்டியர் ஊர் திரும்புவது கோழைத்தனம், கலெக்டரின் மனக்கருத்தை முற்றிலும் அறிந்து மீழ்வதே சரி என்று தம்மவர்க்குக்கூறி எல்லோருமாகக் குற்றாலம் சென்று சேர்ந்தார்கள். அங்கும் கலெக்டர்பேட்டி தராமல் சிவகிரி, கமுதி முதலிய இடங்களில் வந்து சந்திக்குமாறு கூறி அலைக்கழித்து இறுதியில் இராமநாதபுரம் சென்று சேர்ந்துவிட்டான். அங்கும் கட்டபொம்முவை மட்டும் தனியே வந்து தன்னைச் சந்திக்குமாறு ஆளை அனுப்பினான். வெட்ட வெளிச்சமாக சாகிசனின் மனநிலையை உணர்ந்து கொண்ட கட்டபொம்மு படைவீரர்களுக்கு உளவு கூறி விட்டுத் தம்பி ஊமைத்துரையோடு இராமலிங்க விலாசம் என்னும் சேதுபதியின் அரசமாளிகையில் கலெக்டரைசென்று கண்டார்.

கட்டபொம்முவை கைது செய்யும் கருத்தால் படைகளை ஆயத்தம் செய்து வைத்திருந்த கலெக்டர் அவரைக் கண்டவுடன் யாதும் மரியாதையின்றிக் கடுங் கோபத்தோடு நீர்தானே! பாஞ்சாலங்குறிச்சி ஜமீன்தார். கம்பெனியாருக்கு ஏன் இதுகாறும் வரிசெலுத்தவில்லை? என்று மிடுக்காகக் கூறியதோடு மேலும் பல குற்றச்சாட்டுகளைக் கூறினான். அமைதியாகக் கேட்டுநின்ற வீரபாண்டியர் மனத்தேவெகுளி பொங்கியது. கண்கள் சிவந்தன. வரியை வலுவில் வாங்கத் தான் இங்கு எம்மை அழைத்தீரா? வரிசெலுத்தும் வழக்கம் எமது வமிசத்தில் இல்லை. ஆனதைச்செய்க, நாங்கள் போய் வருகிறோம் என்று கூறிப்புறப்பட்டார். இதைக்

கண்ட கலெக்டர் தம் படைக்குத் தலைவனை கண் காட்டினன் வீரர்கள் வந்து வளைந்தார்கள். இதை எதிர்பார்த்தவர்களே யாதலால் கட்டபொம்முவும் ஊமைத்துரையும் நிமிடத்தில் வாளை உருவி வீசினர்கள். மூடி விழிக்கும் நேரத்தில் பல படைவீரர்கள் தரையில் உருண்டார்கள். தளபதி கிளார்க்கும் தலை வேறுபட்டு வீழ்ந்துமாண்டான்.

இந்நிலையில் வெளியே தயாராய் வைக்கப்பட்டிருந்த பாஞ்சை வீரர்கள் விஷம் தடவிய வேல்களோடும் உள்ளே புகுந்து பலரை குத்தி வீழ்த்தினர்கள். இருதிறத்தார்க்கும் பெரும் போர் நிகழ்ந்தது. சேதுபதியின் அரண்மனை செங்களமாகக் காட்சிதந்தது. கலெக்டர் சாகிசன் உயிருக்கஞ்சி ஓடி 'ஒளிந்துகொண்டான். பாஞ்சையர் பக்கமும் சிலர் மாண்டனர். எனினும் வெள்ளையன் சூழ்ச்சியை வெற்றி கண்ட களிப்பால் அரண்மனையைவிட்டு வெளியேறிப் படைகளோடு கட்டபொம்முவும் ஊமைத்தம்பியும் புறப்பட்டு ஊர் வந்து சேர்ந்தார்கள்.

அமைச்சர் சிவசுப்பிரமணியபிள்ளை விரைவாக வெளியேற முடியாமல் சாகிசனல் கைது செய்யப்பட்டு திருச்சிக்கு சென்று கம்பெனி அதிகாரிகளிடம் இங்கு நடந்தவைகளைக் கூறி விடுதலை அடைத்து பலநாட்களுக்குப்பின் பாஞ்சைக்கு வந்துசேர்ந்தார். படைவீரர் பலரை இழந்த கம்பெனி அதிகாரிகள் சாகிசனின் பொறுப்பற்ற செயலை எண்ணி அவனை வேலையினின்றும் நீக்கி லண்டனுக்கு அனுப்பிவிட்டார்கள்.

## 23. நெல் கொள்ளை

இங்ஙனம் சாகிசனை தாய்நாட்டிற்கு அனுப்பிய கம்பெனியார் தென்னட்டுக்கு லஷிங்டன் என்னும் துரைமகனைக்

கலெக்டராக நியமித்து அனுப்பினார்கள். வந்த அவனும் நெல்லையிலிருந்துகொண்டு கட்டபொம்மனுக்கு பல கடிதங்கள் எழுதி வரிவசூலிக்கும் சூழ்ச்சியில் ஈடுபட்டான். நயத்தாலும் பயத்தாலும் பாஞ்சையரிடம் கப்பம் வசூலிக்க அவன் செய்த உபாயங்களெல்லாம் வீணாயின. வீரபாண்டியர் எதற்கும் அசைந்துகொடுக்கவில்லை. தாய்நாட்டில் பிறனுக்கு அடிமைசெய்து வாழ அவர்மனம் சிறிதும் இடம் தரவில்லை.

இது இங்ஙனமாக வெள்ளையர்களிடம் அகப்பட்டு அல்லற்பட்ட தானாதிபதி சிவசுப்பிரமணியபிள்ளை, அவர்களை எவ்வாறேனும் நாட்டைவிட்டு ஓட்டவேண்டுமென்று கருதியிருந்தார். தமது மகன் திருமணச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஸ்ரீவைகுண்டத்தில் வெள்ளைக்காரர்களால் சேமித்து வைக்கப்பட்ட நெல்லை இரவோடிரவாகப் பாஞ்சை வீரர்களை ஏவிக் கொள்ளையிட்டார். ஏராளமான நெல் கொள்ளையிடப்பட்டது. கொலைகளும் விழுந்தன. அதன் தலைமைக் காவலன் பாண்டியத்தேவனும் கொல்லப்பட்டான். நெல்லைமாநகரிலிருந்த தலைமைத் தளபதி பிறகட்டுத்துரை என்பான் இதையறிந்து பெருஞ் சினங்கொண்டான். பரியேறி பாஞ்சைக்கு வந்து வீரபாண்டியரிடம் நடந்ததை உரைத்தான், அதை அறிந்த அரசர் மிகவும் வருந்தினார். தானாதிபதியை மிகவும் கண்டித்தார். நேர்மையற்ற வழிகளைக் கையாண்டு வெள்ளையரை விரட்ட அவர் விரும்பவில்லை. எனவே கொள்ளையிட்ட நெல்லுக்கு நட்ட ஈடு தருவதாக ஒப்புக்கொண்டார்.

பிறகட்டுத்துரை ஒத்துக் கொள்ளவில்லை. கொள்ளையிட்ட பிள்ளையையும் தம்மிடம் ஒப்புவிக்க வேண்டுமென்று கூறினான். ஆனால் அதை வீரபாண்டியன் ஒத்துக்கொள்ள

வில்லை. அமைச்சரை அயலானிடம் கொடுக்க அறவே மறுத்துவிட்டார். வெள்ளைத்துரை வெகுண்டான். ஆத்திர மொழிகளைக்கூறி அகன்றான். நெல்லைக்குச் சென்று நீண்ட கடிதம் எழுதினான். கண்ட கம்பெனி அதிகாரிகள் கடுத்தார்கள். நெல்லைக்கு படைகளை அனுப்பினார்கள்.

## 24. போர் மூண்டது

பெரும் புகழ்பெற்ற பானர்மேன் என்பவனைத் தலைமை தளபதியாக நியமித்து படைகளை அனுப்பினார்கள். காலின்ஸ் டல்லஸ் போன்ற பல துணைப் படைத் தலைவர்களோடும் ஏராளமான படைகள் நெல்லைக்கு வந்துசேர்ந்தன. படை வரவுகண்ட பிற்கட்டுத்துரை பாஞ்சையனை பழிவாங்க வேண்டுமென்ற எண்ணத்தால் மகிழ்ச்சி அடைந்தான். ஒற்றர்கள் மூலம் பாஞ்சாலங்குறிச்சியின் படை நிலையை உணர்ந்தார்கள் ஊமைத்துரையும் படைவீரரும் திருச்செந்தூர் விழாவுக்குச் சென்றிருப்பதையும், தானாதிபதிப்பிள்ளை ஆத்தூரில் தங்கியிருப்பதையும் உணர்ந்தார்கள். இரவே ஆத்தூருக்கு சில வீரர்களை அனுப்பி பிள்ளையின் குடும்பத்தை கைதுசெய்து நெல்லைக்குக் கொண்டுவந்தார்கள். சமயத்தை நழுவவிடாமல் அன்றிரவே படைகளை நடத்தி பாஞ்சைக்குவந்து சேர்ந்தார்கள். படைவருவதை நடுநிசியிலேயே உணர்ந்துகொண்டார் கட்டபொம்மு. ஒரு சில படைவீரரே அதுபொழுது கோட்டையுள் இருந்தும் அவர் சிறிதும் அஞ்சவில்லை.

முருகப் பெருமானை மனதில் எண்ணி வெள்ளையர் படையை எதிர்க்கத் துணிந்தார். கோட்டை முரசுகள்முழங்கின. பக்கத்து ஊரிலிருந்த பாஞ்சை வீரர்கள் முரசொலி கேட்டு ஆயுதங்களோடு அவசரமாக வந்து சேர்ந்தார்கள். காலை ஒன்பது மணியளவில் பெரும் போர் தொடங்கிற்று,

பீரங்கிகளும், துப்பாக்கிகளும் விண்ணதிற முழங்கின. இரு திறப் படைகளுக்கும் கடும்போர் நடந்தது. வேலும் வாளும் கொண்டு பாஞ்சையர் பரங்கிகளைப் பருந்துகளுக்கு விருந்திட்டார்கள். எண்ணற்ற வெள்ளைப்படை வீரர்கள் மண்ணிற் சாய்ந்து மாண்டு மடிந்தார்கள். காலின்ஸ் என்ற வெள்ளைத் தளபதி வெள்ளையத் தேவனின் வீரவேலுக்கு விருந்தானன். தலைவன் மாண்டு படை சிதைவதை உணர்ந்த பானர் மேன் வாபசாகும்படி தன்படை வீரருக்கு உத்தரவிட்டான். போர் செய்வதை நிறுத்திப் பாடிபோய் சேர்ந்து தன்தோல்வியை நினைத்து வெள்ளையர் தளபதி வருந்தி இருந்தான். பகைவர் படை பின்வாங்கியதைக் கண்ட கட்டபொம்முவும் பாஞ்சை வீரரும் வெற்றிமுழக்கம் செய்து வீரத்தோள் கொட்டினர்.

## 25 கோட்டையை விட்டு வெளியேறியது

முதன் முதல் பாஞ்சாலங்குறிச்சி மண்கோட்டையைக் கண்ட பானர்மேன் ஒரு சில நிமிடங்களில் கோட்டையை இடித்துக் கட்டபொம்முவைக் கைதுசெய்துவிடலாம் என்று கருதினன். அவன் மதிப்பில் மண்ணைப் போட்டனர் மான வீரர்கள். தமிழ் நாட்டுச் ஜிப்ரால்டர் பாஞ்சைக் கோட்டை என்பதை உணர்ந்தான். போரை நிறுத்தி மேலும் படைகளை அனுப்புமாறு நெல்லைக்கும், சென்னைக்கும் தகவல் அனுப்பினன். படைவரவை எதிர்பார்த்துக் காத்திருந்தான். இந் நிலையில் கட்டபொம்முவும் தமது படைகளை மேலும் பலப் படுத்தவும் வெள்ளையர்கள் மேலதிகாரத்தை விரும்பாத பாளையக்காரர்களை ஒன்று சேர்க்கவும் கருதினர். மேலும் சென்னைக்குச் சென்று கம்பெனி மேலதிகாரிகளைக் கண்டு பேசினல் தம் சுதந்திரத்திற்கு இழுக்கில்லாத ஒரு முடிவு ஏற்படலாம் என்று தானாபதி சிவசுப்பிரமணியபிள்ளை கூறிய

உரையும் அவருக்குப்பொருத்தமாகத் தோன்றவே மறுநாள் இரவே வீரபாண்டியர் தம்பிமாரோடு ஒரு சில வீரர்களும் அமைச்சரும் உடன்வர கோட்டையைவிட்டு யாரும் அறியாமல் வெளியேறினர்.

## 26. விதியின் வலிமை

மதிமருண்டு மனத்தளர்ச்சி அடைந்திருந்த பானர்மேன் கட்டபொம்முவும், ஊமைத்துரையும் வெளியேறிச் சென்றதை எப்படியோ உணர்ந்துகொண்டான். "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ளவேண்டும்" என்றபடி கோட்டையில் வீரர்களில்லாத சமயம் பார்த்து தமது படைகளை ஏவிக் கோட்டையைப் பிடித்துத் தமதுகொடியையும் நாட்டிவிட்டான். அத்துடன் நில்லாது எட்டையபுரத்தார் படைகளையும் தமது படைகளையும் ஏவி வடக்கேசென்ற கட்டபொம்முவையும் ஊமைத்துரையும் பிடிக்குமாறு கட்டளையிட்டான். தமக்கு ஆதரவான பாளேப்பட்டார்க்கெல்லாம் கட்டபொம்முவைப் பிடித்துத்தந்தால் வேண்டியபரிசு தருவதாககடிதம் எழுதி அறிவித்தான்.

காசாசை பிடித்த கால்வருடிகள் கட்டபொம்முவைப் பிடிக்கக் காலம் கருதியிருந்தார்கள். இந்நிலையில் வடக்கே சென்ற பாஞ்சையதிபர் கட்டபொம்முவும் துணைவர்களும் இடையில் கோலார்பட்டியில் தங்கினார்கள். இவர்களைத் தேடிப்பிடிப்பதற்காக அனுப்பப்பட்ட படைகள் கோலார்பட்டி அரண்மனையை வளைந்துகொண்டார்கள். அதைக் கண்ட வீரமன்னர், வெள்ளைத் தளபதி தம் வெளியேற்றத்தை அறிந்துகொண்டான் என்பதையும் பாஞ்சையில் நடந்துள்ளவற்றையும் ஒருவாறு ஊகித்துக்கொண்டு தாம் வெளி

யேறி வந்தது தவறு என்பதை உணர்ந்தார். எனினும் படைகளிடம் பிடிபடாமல் தப்புவதற்காக வீரரை ஊக்கி சுற்றி நின்ற படைகளின்மேல் பரியேறிப் பாய்ந்து வாள்கொண்டு வீசி வெளியேறினார்கள். எண்ணற்ற கொலைகள் விழுந்தன முடிவில் சிலவீரர்கள் பின்தொடர கட்டபொம்மும், ஊமைத் துரையும் தப்பிச்சென்றுவிட்டார்கள். தானபதி பிள்ளையும் மற்றும் சிலரும் அகப்பட்டுக்கொண்டார்கள். அவர்களில் தானபதிபிள்ளையை பானர்மேன் நாகலாபுறத்தில் தூக்கிலிட்டுக் கொடுமையாகக் கொன்று அவர் தலையை பாஞ்சைக் கோட்டையில் யாவரும் அறியும்படி தொங்கவிட உத்தர விட்டான்.

## 27. தொண்டைமான் துரோகம்

துணைவர்களோடு வெள்ளையரை வென்று வந்த வீர பாண்டியர் இடைவழியில் பல அல்லல்களை அடைய நேர்ந்தது. வீரமாபுரி என்று விளங்கி இருந்த நம்தலைநகர் பகைவர் வசப்பட்டது அவருக்குச் சொல்லொணாத் துயரத்தை விளைவித்தது. "பட்டகாலிலே படும்" என்பதைப் போல தாம் ஊர்ந்துவந்த அழகிய புரியும் கனவேகமாக வந்ததால் குடலறுந்து இறந்துவிட்டது. எனவே பெருந்துயருழந்து கால் நடையாகவே சென்று புதுக்கோட்டைப் பகுதியைச் சேர்ந்தார்கள். புதுக்கோட்டை அரசர் விஜயரகுநாத தொண்டமான் தமது நண்பராதலால் அவர் அரண்மனையில் தங்கியிருந்து திருச்சிக்குச் செல்லலாம் என்ற கருத்தோடு ஊமைத்துரையும் தானும் துணைவரோடு தொண்டமான் அரண்மனையைச் சென்று சேர்ந்தார்கள். கட்டபொம்மு வைப் பிடித்துத்தந்தால் ஏராளமான பரிசுகள் கொடுப்பதாக பானர்மேன் தொண்டமானுக்கு கடிதம் எழுதி இருந்தபடி

யால் வஞ்சகக் கருத்தோடு வரவேற்று உபசரித்தார் தொண் டமான்.

தேடிச் சென்ற பொருள் காலில் அகப்பட்டது போல் வலிய வந்த வீரபாண்டியரை வஞ்சித்தான் தொண்டமான். சிறந்த உபசரணையால் அவரை மயக்கி வேற்றிடம் செல்லாது தடுத்ததோடு படைகளோடு வந்து தம்மிடமுள்ள கட்ட பொம்முவை பிடித்துக்கொள்ளுமாறு பானர்மேனுக்கு அறிக்கை விடுத்தான். " சிங்கங்கள் சிக்கின " என்னே தமிழ் மன்னனின் துரோகம். செங்குட்டுவன் போன்ற வீரமிக்க தமிழ் மன்னரைப் பெற்றிருந்த தமிழ்த்தாயின் வரலாற்றில் சாரமற்ற கோழைகளாகிய துரோகிகளும் மன்னராய்ப் பிறந்து தமிழ்த் தாய்க்கு இழுக்குத் தேடியுள்ளார்கள். தொண்டமான் கடிதம் கண்ட பானர்மேன் மிகமகிழ்ந்து படைகளோடு வந்து, மேல்மாடியில் துயில் கொண்டிருந்த வீரபாண்டியத்துரையும் துணைவரையும் கைதுசெய்தார்கள். விதி தம்மை சதிசெய்துவிட்டது என்பதை உணர்ந்த அவர், கம்பால் படைகளைத் தாக்கத் துணிந்த ஊமைத்துரையை தடுத்து நிறுத்திவிட்டார். தாமே கைதுசெய்யும்படி பகை வரிடம் கூறிநின்றார். யாதொரு இடையூறுமின்றிக் கட்ட பொம்முவைக் கைது செய்து பல்லக்கில்வைத்து இருவரை யும் கொண்டு சென்றார்கள். சிங்கங்கள் அகப்பட்டதை எண்ணி சிந்தை மகிழ்ந்தான் பானர்மேன்.

## 28. கயத்தாற்று விசாரணை

இவ்விதம் 1799ம் வருடம் அக்டோபர் மாதம் முதல் தெய்தியில் கைதுசெய்த பாஞ்சைவீரரை கயத்தாருக்குக் கொண்டுசென்றான் வெள்ளைத் தளபதி பானர்மேன். தமிழ

கத்தை ஒருசேர அடக்க எண்ணிய அவன் பாளையப்பட்டார்களை எல்லாம் அங்குவந்துசேரும்படி ஆணையிட்டான். வேண்டிய படைகளையும் அங்குசேர்ந்து கட்டபொம்முவை "விசாரணைசெய்தல்" என்ற நாடகத்தை நடத்தினன். சாட்சிகளும் விசாரிக்கப்பட்டனர். முடிவில் கப்பம் செலுத்தமறுத்தது, கம்பெனியாரை அவமதித்தது, வெள்ளைக்காரர் பலரை கொன்றது போன்ற பல குற்றச்சாட்டுகளைக் கட்டபொம்மு வின்மேல் சுமத்தினன். கேட்ட வீரபாண்டியர் நீர் கூறியவற்றை நான் குற்றங்களாகக் கருதவில்லை. எங்கள் மரபினர் எப்பொழுதும் வரிசெலுத்தியதில்லை. சொந்தநாட்டில் அந்நியர்களாகிய உங்களுக்கு வரிசெலுத்த மறுத்தது எப்படிக் குற்றமாகும். சும்மா இருந்த எங்களை படையெடுத்து வந்து தாக்கினீர், வெள்ளைக்காரர்கள் மாண்டார்கள். அதற்கு யார் பொறுப்பு என்பதை எண்ணிப்பாரும். என்பன போன்ற விடைகளை இடிமுழக்கம்போல் பொழிந்தார்.

## 29. தூக்கு மேடை

பழிவாங்க எண்ணிய வெள்ளையனிடம் எப்படி நியாயத்தை எதிர்பார்க்கமுடியும்? உமக்குத் தூக்குத் தண்டனை விதித்திருக்கிறேன் என்றான் தளபதி. நான் அதை வரவேற்கிறேன் என்றார் மானவீரர். துரோகிகள் மலிந்துவிட்ட தமிழகத்தில் இனி என்போன்ற வீரர்கள் வாழத் தகுதியற்றவர்கள், அயலானுக்கு அடிவருடி வாழும் ஆண்மையற்றவர் முன்னே யான் ஆவிதாங்கி வாழ விரும்பவில்லை. என்ற வீர மொழிகளைக்கூறி சபையிலிருந்த துரோகிகளை யெல்லாம்ஒரு பார்வை பார்த்துவிட்டு தானே சென்று புளியமரத்தில் பிணைத்திருந்த தூக்குக்கயிற்றைப் பிடித்துக்கொண்டு செங்

தில் பெருமானைச் சிறிதும் நேரம் மனதில் சிந்தித்து முருகா, முருகா, முருகா என்று மும்முறைகூறிச் சுருக்கிட்டு மாண்டார். அவருடைய சவக்குழியில் அன்றே தமிழ் நாட்டின் சுதந்திரமும் புதைக்கப்பட்டது. மன்னர்களும் மக்களும் ஆங்கில ஆட்சியின் அடிமைகளானார்கள். ஊமைத்துரை முதலிய வீரர்களை வெள்ளையன் பாளையங்கோட்டையிலே கொண்டு சிறைவைத்தான்.

## 30. ஊமைத்துரை

கட்ட பொம்முவை தூக்கிலிட்டுப் பழிவாங்கியதோடு வெள்ளையர்களின் வெறி அடங்கவில்லை. ஊமைத்துரை முதலியவர்களையும் காலவரையறையின்றிச் சிறையிலிட்டார்கள். நியாயம் கிடைக்குமென்று எதிர்பார்த்தும் பலனொன்றுமில்லை. எனவே தப்பி நின்ற பாஞ்சை வீரர்கள் தமது இளவரசரை விடுவிக்கத் துணிந்தார்கள். ரகசியமாகக் கூடி செய்யவேண்டியதை முடிவுசெய்தார்கள். அதன்படி புறப்பட்டது ஒரு புரட்சிப்படை. சிறைகள் தவிடுபொடியாயின. விலங்குகள் முறிந்தன. காவலர் பலர் கொலையுண்டனர். எதிர்த்த படைகள் இற்றொழிந்தன இரவே யாவரும் பாஞ்சைக்கு வந்து சேர்ந்தனர்.

பரங்கியரைப் பழிவாங்க பாராளும் முடிசூடினார் ஊமைத்துரை. இடிந்த கோட்டை எழிலுற ஆக்கப்பட்டது. வெள்ளையர் பற்றிய இடங்களையெல்லாம் பாஞ்சையர் கைப்பற்றிக்கொண்டு வெள்ளையர்களை ஓட அடித்தார்கள். அவர்களின் கருமருந்து ஆயுதங்கள் எல்லாம் கொள்ளையிடப்பட்டன. மீண்டும் பெரும்போர் மூண்டது. இப்போரில் வெள்ளையர் படைகளுக்கு அக்னியூ என்பான் தலைமைதாங்கி

நடத்தினான். பலமுறை வெள்ளைப்படைகள் வீழ்ச்சியுற்றன. பாஞ்சையர் வீரவெறியாடினர். இரத்தம் உண்டு போர் செய்தனர். என் செய்தும் பயனென்ன! எட்டப்பர்களும், தொண்டைமான்களும் உளவுசொல்ல இருக்கும் பொழுது பாஞ்சையருக்கு எங்ஙனம் வெற்றிகிட்டும். நச்சுப்புகையால் கோட்டையிலுள்ளவர்களை நாசம் செய்தனர். நாசகாலர்கள் கோட்டையைவிட்டு வெளியேறிச் சிவகங்கை சின்னமருதுப் பாண்டியனோடுகூடி ஊமைத்துரை மேலும் போராடி வெள்ளையர்களை வேரறுத்தார். துரைச்சிங்கம் முதலிய தம்பியரையும் வீரர் சிலரையும் பிடித்துத் தூக்கிலிட்டுக் கொன்றான் பானர்மேன். இதைக்கேட்ட ஊமைத்துரை மேலும் போர் செய்ய மனமின்றி திண்டுக்கல் கோட்டைக்குச் சென்று அங்கிருந்து மாயமாக மறைந்தார். பகைவர் கையில் சிக்காது பரமனடி அடைந்தார். வெள்ளையருக்கு வெற்றிகிட்டியது.

அவர்களைச் சேர்ந்த உற்றார் உறவினர்களை நாடுகடத்திவிட்டார்கள் வெறியர்கள். ஊமைத்துரைக்கு ஒருமகன்இருந்தார். சூடாமணித்துரை என்பது அவர் பெயர். நெடுநாட்கள் நெல்லையிலேயே அவர் வாழ்ந்தார். வீரபாண்டியரின் தம்பி சிவத்தையாவின் மனைவி சண்டையின் போதுநிறைகர்ப்பிணி கோட்டையைவிட்டு கர்ப்பத்தைக் காக்கும்பொருட்டுத் தனியேநள்ளிரவில் பாஞ்சாலங்குறிச்சியை விட்டு வெளியேறி வந்துவிட்டாள். அவளைக் கம்பெனியார் கைதுசெய்து திருச்சிக்குக் கொண்டு சென்று சிறைவைத்தார்கள். அந்தஅம்மையார்வயிற்றில் ஓராண்மகவு பிறந்தது. கம்பெனியாரே தாயும் மகனையும் காப்பாற்றி வந்தார்கள். அதனால் "கம்பெனிச் செல்வம்" என்று அம்மகவுக்கு பெயரிட்டார்கள். வயது வந்ததும் அவருக்கு மணமும்செய்து வேறாகக்குடியமைத்து 140 பகோடா (அக்காலநாணயம்) மாதச்செலவுக்கு கொடுத்துவந்தார்கள். ஆனால் திருச்சியை விட்டுச்செல்ல அவர் அனுமதிக்கப்படவில்லை. தற்சமயம் மேற்படி வமிசவழி வந்தவர்கள் செக்காரக்குடி, குளத்தூர், வேடப்பட்டி, ஆதனூர் இருந்து வருகிறார்கள். நாட்டு விடுதலைக்கு பாடுபட்ட வமிசம் தற்சமயம் நலிந்து காணப்படுவதை அரசாங்கம் அறிந்து ஆவனசெய்யவேண்டும்.

முற்றும்.

---

அசோகா அச்சகம், சங்கரநயினார்கோவில் — 1956.